நிலந்தவ வுருட்டிய நேமி யோருஞ்
சமங்கண் கூடித் தாம்வேட் பவ்வே
௫ நறுவிரை துறந்த நாறா நரைத்தலைச்
சிறுவர் தாயே பேரிற் பெண்டே
நோகோ யானே நோக்குமதி நீயே
மறப்படை நுவலு மரிக்குரற் றண்ணுமை
யின்னிசை கேட்ட துன்னரு மறவர்
௧௦ வென்றிதரு வேட்கையர் மன்றங் கொண்மார்
பேரம ருழந்த வெருவரு பறந்தலை
விழுநவி மாய்ந்த மரத்தின்
வாண்மிசைக் கிடந்த வாண்மை யோன்றிறத்தே.

திணை - கரந்தை ; துறை - கையறுநிலை.
கண்டார் தாய்க்குச்சொல்லியது.
கழாத்தலையார். (உ௭௦)

(உ௭௧.) நீரற வறியா நிலமுதற் கலந்த
கருங்குர னொச்சிக் கண்ணார் குவவுத்தழை
மெல்லிழை மகளி ரைதக லல்குற்
றொடலை யாகவுங் கண்டன மினியே
௫ வெருவரு குருதியொடு மயங்கி யுருவுகரந்
தொறுவாய்ப் பட்ட தெரியலூ ரன்
செத்துப் பருந்துவந் துவப்ப மைந்தன் கண்டனெ
மறம்புகல் மைந்தன் மலைந்த மாறே.

திணை - நொச்சி ; துறை - செருவிடைவீழ்தல்.
வெறிபாடிய காமக்கண்ணியார். (உ௭௧)

(உ௭உ.) மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சி
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த
காத லன்மர நீமற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
௫ தொடியுடை மகளி ரல்குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலி
னூர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே.

திணையும் துறையும் அவை.
மோசிசாத்தனார். (உ௭உ)

(௨௭௩.) மாவா ராதே மாவா ராதே
எல்லார் மாவும் வந்தன வெம்மிற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வ னூரு மாவா ராதே
௫ இருபேர் யாற்ற வொருபெருங் கூடல்
விலங்கிடு பெருமரம் போல
வுலந்தின்று கொல்லவன் மலைந்த மாவே.

திணை - தும்பை; துறை - குதிரைமறம்.
எருமைவெளியனார். (௨௭௩)

(௨௭௪.) நீலக் கச்சைப் பூவா ராடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிற்றொடு வேலொழிந் தினியே
தன்னுந் துரக்குவன் போலு மொன்னல
௫ ரெஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பி னூக்கி மெய்க்கொண் டனனே.

திணை - அது; துறை - எருமைமறம்.
உலோச்சனார். (௨௭௪)

(௨௭௫.) கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலு
மொத்தன்று மாதோ விவற்கே செற்றிய
திணிநிலை யலறக் கூழை போழ்ந்துதன்
௫ வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி
யோம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கொள் யானையிற் குடர்கா றட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தொழிந்ததன் றோழற்கு வருமே.

திணையும் துறையும் அவை.
ஒருஉத்தனார். (௨௭௫)

(௨௭௬.) நறுவிரை துறந்த நரைவெண் கூந்த
லிருங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன்
குடப்பாற் சில்லுறை போலப்
௫ படைக்குநோ யெல்லாந் தானா யினனே.

திணை - அது; துறை - தானைநிலை.
மதுரைப்பூதனிளநாகனார். (௨௭௬)

(உஎஎ.) ......... ......... ......... .........னன
வானரைக் கூந்தன் முதியோள் சிறுவன்
களிறெறிந்து பட்டன னென்னு முவகை
யீன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
ரு கொன்கழை துயல்வரும் வெதிர .........
.........த் தூங்கிய சிதரினும் பலவே.

திணை - அது; துறை - உவகைக்கலுழ்ச்சி.
பூங்கணுத்திரையார். (உஎஎ)

(உஎஅ.) நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோண்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்
ரு முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.

திணையுந் துறையும் அவை.
காக்கைபாடினியார் *நச்செள்ளையார். (உஎஅ)

(உஎகூ.) கெடுக சிந்தை கடிதிவ டுணிவே
மூதின் மகளி ராத றகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தன்னே
ரு நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலக்கி யாண்டுப்பட் டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
க0 யொருமக னல்ல தில்லோன்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.

திணை - வாகை; துறை - மூதின்முல்லை.
ஒக்கூர்மாசாத்தியார். (உஎகூ)

(உஅ0.) என்னை மார்பிற் புண்ணும் வெய்ய
நடுநாள் வந்து தும்பியுந் துவைக்கு

---

* நச்சென்ளையாரென்றும், நச்செளையாரென்றும் பிரதிபேதமுண்டு.

நெடுநகர் வரைப்பின் விளக்கு நில்லா
துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கு
௫ மஞ்சுவரு குராலின் குரலுந் தூற்று
நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்குஞ்
செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா
துடிய பாண பாடுவல் விறலி
யென்னா குவிர்கொ லளியிர் நுமக்கு
௧௰ மிவணுறை வாழ்க்கையோ வரிதே யானு
மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்
தொன்றுதா ழடுத்த வம்பலைத் தெரியற்
சிறுவெள் ளாம்ப லல்லி யுண்ணுங்
கழிகல மகளிர் போல
௧௫ வழிநினைந் திருத்த லதனினு மரிதே.

திணை - பொதுவியல்; துறை - ஆனந்தப்பையுள்.
மாறோக்கத்துநப்பசலையார். (உ௮௰)

(உ௮௧.)*(க)திங்கனி யிரமொடு வேம்பு (உ)மனைச்செரீஇ
(௩)வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
(௪)கைபயப் பெயர்த்து (௫)மையிழு திழுகி
யையவி சிதறி யாம்ப லூதி
௫ யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வளைஇக் கடிநறை புகைஇக்
(௬)காக்க வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே.

திணை - [காஞ்]சி; துறை - பேய்க்காஞ்சி.
அரிசில்கிழார். (உ௮௧)

க. திங்கினியிரமொடு. ௩. யாங்குமருப்பு. ௬. காக்கமவம்மோ.
திங்கனியிரவமொடு. ௪. கைபயப்பெயர்த்து.
உ. மனைச்செரீஇய. ௫. மையிழுதிழுகி.

(உ௮உ.) எஃகுளங் கழிய விருநில மருங்கி
னருங்கட னிறுத்த பெருஞ்செ யாளனை
யாண்டுள னோவென வினவுதி யாயின்
......... ......... ......... .........

* இதுமுதலாக மூலத்தில் இலக்கமிட்டுக்குறிக்கப்பட்ட எண்களுக்குச் சரியாக அவ்வப்பாட்டின்கீழே எழுதப்பட்டுள்ள குறிப்புகள், பிரதிபேதங்களி லுள்ள பாடபேதங்களெனக்கொள்க.

வருபடை தாங்கிய கிளர்தா ரகல
மருங்கட னிறுமார் (க)வயவ ரெறிய
வுடம்புந் தோன்றா வுயிர்கெட் டன்றே
மலையுநர் மடங்கி மாறெதிர் (உ)கழியத
.......... .......... .......... ..........
யலகை (ங)போகிச் சிதைந்துவே றாகிய
பலகை யல்லது களத்தொழி யாதே
சேண்விளங்கு நல்லிசை நிறீஇ
நாநவில் புலவர் வாயு ளானே.

திணை - .......... .......... .......... ..........

பாலைபாடியபெருங்கடுங்கோ. (உஅஉ)

---

க. வாயவெறிய. உ. கழறிய. ங. பொறகச.

(உஅங.) *ஒண்செங் குரலித் தண்கயங் கலங்கிக், (க)கனைநீாகாயநாளிகா
பெறாஉம் பௌவவுறையளவா.......... ............விமயகஇ
மாறுகொளமுதலையொடுழமாறுபெயரு, மழிமபிலணடாஙகாற
கையுமெனறும வலம்புரிகொசரவைககளததாறு மனறுளென
பதுகெட.................... ........................ானெபாங்கற
கதிாசூழகுறட்டினவெளிறததிஙக ளுயிாபுறப்படாவளவைத
தெறுவா தெறறிபபாவைதிணிமணலயரு மென்றோண்மகளிா
ஙனறுபப ....................ண்டபாசிலைக், கமழ்பூந்தும்பை
நுதலசைத்தோனே.

திணை - தும்பை; துறை - பாடாண்பாட்டு.

அணைநெடுங்க............ ............யாா். (உஅங)

---

க. கனையுளானெ............... விமயகஇ மாறுகொளமுதலையொடுழமா நீா்
காய்காளிகாபெறாஉமபௌவவவுறையளவா .......... .. ானெபாஙகறகதிா்
பெயருமழிமபிலணடஙகாறகையுமெனறுமவலம்புரிகோச ாவைக்களத்தானுமனறு
ளென்பதுகெட........ சூழ்குறட்டினவேளிறத்திங்களுயிறுபுறப்படாவளவை.

(உஅச.) வருகதில் வல்லே வருகதில வல்லெனை
வேந்துவிடு விழுத்தூ தாங்காய் கிசைப்ப
நாலரி மாலை (க)சூடிக காவிற
றமியன் வந்த மூதி லாள
(ரு) னருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
வொருகை யிரும்பிணத் தெயிறு (உ)மிறையாகத்

---

* இப்பாட்டு, பொருள்விளங்காமையால் ஏட்டிலுள்ளவாறே பதிப்பிக்கப் பட்டது. பின்னும் இப்படியே பலவிடத்தும் பதிப்பிக்கப்படும்.

(௩)திரிந்த வாய்வா டிருத்தாத்
(௪)தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே.

திணையும் துறையும் அவை.

ஓரம்போகியார். (உ௮௪)

---

க. சூட்டி. உ. பிறையாக. ௩. திருந்த. ௪. தனக்கிருந்தானை.

(உ௮௫.) பாசறை யீரே பாசறை யீரே
துடியன் கையது வேலே யடிபுனை
வாங்கிரு மருப்பிற் றீந்தொடைச் சீறியாழ்ப்
பாணன் கையது தோலே காண்வரக்
௫ கடுந்தெற் றூறுடையின் ............
வாடிய மாலை மலைந்த சென்னியன்
வேந்துதொழி லயரு மருந்தலைச் சுற்றமொடு
நெடுநகர் வந்தென விடுகணை யொலித்த
(க)மூரிவெண் டோள் ..................
௧௦ சேறுபடு குருதிச் செம்மலுக் கோஒ
(உ)மாறுசெறு நெடுவேன் மார்புளம் போக
நிணம்பொதி கழலொடு நிலஞ்சேர்ந் தனனே
அதுகண்டு, (௩)பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந்
திறைஞ்சி யோனே குரிசில் பிறங்குகதி
௧௫ ரலமருங் கழனித் தண்ணடை யொழிய
(௪)விலம்பா டொக்கற் றலைவற் கோரூர்
கரம்பைச் சீறூர் நல்கின னெனவே.

திணை - வாகை; துறை - ...... .... முல்லை.

அரிசில்கிழார். (உ௮௫)

---

க. மூரிவெண்டோல். உ. மாறுபடுநெடு. ௩. பார்த்தோர். ௪. இலம்பாடு.

(உ௮௬.) வெள்ளை வெள் யாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்ன விளைய ரிருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டை (க)யென் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற் கிடப்பித்
௫ தூவெள் ளறுவை (உ)போர்ப்பித் திலதே.

திணை - தும்பை; துறை - வேத்தியல்.

ஔவையார். (உ௮௬)

---

க. என். உ. போர்ப்பித்திலவே.
போர்ப்பித்திலனே.

(உ௮௭.) துடியெறி யும்புலைய
வெறிகோல்கொள்ளு மிழிசின
கால மாரியி னம்பு தைப்பினும்
வயற்கெண்டையின் வேல்பிறழினும்
௫ பொலம்புனை யோடை யண்ணல் யானை
யிலங்குவான் மருப்பி னுதிமடுத் தூன்றினு
மோடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் (௧)புரளுந்
௧௦ தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் (௨)மன்ற னன்று
முயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்
வம்ப வேந்தன் றானை
யிம்பர் நின்றுங் காண்டிரோ வரவே.

திணை - கரந்தை ; துறை - நீண்மொழி.

சாத்தந்தையார். (உ௮௭)

௧. பிறழும். ௨. மண்ணகன்று.

(உ௮௮.) மண்கொள வரிந்த வைந்நுதி மருப்பி
னண்ண லல்லே றிரண்டுடன் மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க
௫ வாரமர் மயங்கிய ஞாட்பிற் றெறுவர
நெடுவேல் பாய்ந்த நாறுடை நெஞ்சத
(௧)தருகுகை ......... ......... மன்ற
குருதியொடு துயல்வரு மார்பின்
முயக்கிடை யீயாது மொய்த்தன பருந்தே.

திணை - தும்பை ; துறை - மூதின்முல்லை.

கழாத்தலையார். (உ௮௮)

௧ தருகுறை.

(உ௮௯.) ஈரச் செவ்வி......... .........
......... ......... .........களனே
கல்லெருது நோக்கி வீறு.........
வேறல் வாயு மூழவன் போலப்
௫ பாடுபெறு தொல்குடிப் பாடுபல தாங்கிய

முதி லாள ருள்ளுங் காதலிற்
றனக்குமுகந் தேந்திய ப...... .........
......... ......னு மதுவுமன் றிசினே
கேட்டியோ வாழி பாண பாசறைப்
பூக்கோ ளின்றென் றறையு
மடிவாய்த் தண்ணுமை யிழிசினன் குரலே.

திணை - ......... .........; துறை - .........முல்லை.
கழாத்தலையார். (உ௮௯)

(உ௯0.) இவற்கீத் துண்மதி கள்ளே சினப்போ
ரினக்களிற் றியானை யியறேர்க் குரிசி
னுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை
யெடுத்தெறி ஞாட்பி னிமையான் றச்ச
௫ னடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே
மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனும்
முறைப்புழி யோலை போல
மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே.

திணை - கரந்தை; துறை - குடிநிலையுரைத்தல்.
ஔவையார். (உ௯0)

(உ௯௧.) சிறாஅர் துடியர் பாடுவன் மகாஅர்
தூவெள் ளறுவை மாயோற் குறுகி
(க)யிரும்புட் பூச லோம்புமின் யானும்
விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவெ
௫ னெம்போற் பெருவிதுப் புறுக வேந்தே
கொன்னுஞ் சாதல் வெய்யோற்குத் தன்றலை
மணிமருண் மாலை சூட்டி யவன்றலை
யொருகாழ் மாலை தான்மலைந் தனனே.

திணை - கரந்தை; துறை - வேத்தியல்.
நெடுங்கழுத்துப்பரணர். (உ௯௧)

---

## ௧. இரும்பூட்பூசல்.

(உ௯உ.) வேந்தர்க் கேந்திய தீந்தண் ணற......
......... தனக்குமுறை வளாவ விலக்கி
வாய்வாள் பற்றி நின்றன னென்று
சினவ லோம்புமின் சிறுபுல் லாள
௫ ரீண்டே போல வேண்டுவ னாயி

னென்றுறை வருக வென்னுங் கம்மென
வெழுதரு பெரும்படை விலக்கி
யாண்டு நிற்கு மாண்டகை யன்னே.

திணை - வஞ்சி; துறை - பெருஞ்சோற்றுநிலை.

விரிச்சியூர் நன்னாகனார். (உகூஉ)

(உகூங.) (க)நிறபபுடகொலலா யானைமெலொன
குறுமபறகெறியுமொவறறணணுமை
நாணுடைமாககடகிரஙகுமாயி
(உ)னைமபிறுமபேரொழிவிழிநதுவிலையெனப
௫ பிறர்மனை புகுவர் கொல்லோ
வளிய டானே பூவிலைப் பெண்டே.

திணை - காஞ்சி; துறை - பூக்கோட்காஞ்சி.

நொச்சிநியமங்கிழார். (உகூங)

---

க. நிறபபுடகொலலைமெலொனதுவமபறகெறியு. உ. னைமபிறும.

(உகூச.) வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக்
(ச)கண்கூ டியாத்த கடன்மருள் பாசறைக்
குமரிப்படை (உ)தழீஇய கூற்றுவினை யாடவர்
தமர்பிற (ங)ரறியா வமர்மயங் கழுவத்
௫ திறையும் பெயருந் தோற்றி நுமருள்
நாண்முறை தபுத்திர் வம்மி னீங்கெனப்
போர்மலைக் (ச)தொருசிறை நிற்ப யாவரு
மரவுமிழ் மணியிற் குறுகார்
(௫)நிரைதார் மார்பினின் கேள்வனைப் பிறரே.

திணை - தும்பை; துறை - தானைமறம்

பெருந்தலைச்சாத்தனார். (உகூச)

---

க. கண்கூடிறுத்த. ங. அறியாதமர். ௫. நிரைகாழ்மாலையெங்
உ. தழீஇக். ச. ஒருதிறநிற்ப. கேள்வனை.

(உகூ௫.) கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்
வெந்துவாய் மடித்து வேறலைப் (க)பெயரித்
(உ)தோடுகைத் தெழுதருந் (ங)தூர்க்கெதிரி ஞாட்பின்
வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி
௫ யிடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி

வாடுமுலை யூறிச் சுரந்தன
வோடாப் பூட்கை விடலை தாய்க்கே.

திணை - தும்பை; துறை - உவகைக்கலுழ்ச்சி.

ஔவையார். (உகூரு)

க. பெயரத். உ. தொழுகைத். ௩. தார்நெறி.

(உகூசு.) வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவு
நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவு
மெல்லா மனையுங் கல்லென் றவ்வே
வேந்துடன் றெறிந்தான் கொல்லோ
ரு நெடிதுவந் தன்றா னெடுந்தகை தேரே.

திணை - வாகை; துறை - ஏறாண்முல்லை.

வெள்ளைமாளர். (உகூசு)

(உகூஎ.) பெருநீர் மேவற் றண்ணடை யெருமை
யிருமருப் புறழு நெடுமா (க)னெற்றின்
பைம்பய றுதிர்த்த கோதின் கோலனைக்
கன்றுடை மரையா துஞ்சுஞ் சீறூர்
ரு கோளிவண் வேண்டேம் புரவே (உ)நாரரி
(௩)நனைமுதிர் சாடி நறவின் வாழ்த்தித்
துறைநனி கெழீஇக் கம்புளீனுந்
தண்ணடை பெறுதலு முரித்தே வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
க௦ மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

... ..... ......... ......... ......... ......... (உகூஎ)

க. நெற்றின். உ. நாரரி. ௩. நனைமுதிர். ச. வைந்நுனை.

(உகூஅ.) எமக்கே கலங்க றருமே தானே
தேற லுண்ணு மன்னே நன்று
மின்னான் மன்ற வேந்தே யினியே
நேரா ராரெயின் முற்றி வாய்மடித்
ரு ......... ......... ரநீமுந் தெனவே.

திணை - காந்தை; துறை - நெடுமொழி.

*ஆலியார். (உகூஅ)

* ஆனியாரென்றும் பிரதிபேதமுண்டு.

(உகூகூ.) பருத்தி வேலிச் சீறூர் மன்ன
(க)னுழுத்தத ருண்ட வோய்நடைப் புரவி
கடன்மண்டு தோணியிற் படைமுகம் போழ
நெய்ம்மிதி யருந்திய கொய்சுவ லெருத்திற்
௫ றண்ணடை மன்னர் தாருடைப் புரவி
யணங்குடை முருகன் கோட்டத்துக்
(உ)கலந்தொடா மகளிரி னிகழ்ந்துநின் றவ்வே.

திணை - நொச்சி; துறை - குதிரைமறம்.
பொன்முடியார். (உகூகூ)

க. உழுத்தருண்ட. உ. கலங்கொடா.

(௩00.) தொரூஅ தொரூஅ வென்றி தோலொடு
துறுகன் மறையினு முய்குவை போலா
..................... ........... ........... ...........யே
கற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
௫ பேரூ ரட்ட கள்ளிற்
(க)கோரிற் கோரிற் றேருமா னின்னே.

திணை - தும்பை; துறை - தானைமறம்.
அரிசில்கிழார். (௩00)

க. கோரிற்கோயிற்.

(௩0க.) பல்சான் றீரே பல்சான் றீரே
குமரி மகளிர் கூந்தல் புரைய
வமரி னிட்ட வருமுள் வேலிக்
கல்லென் பாசறைப் பல்சான் றீரே
௫ முரசுமுழங்கு (க)தானைநு மரசு மோம்புமி
னொளிறேந்து மருப்பினுங் களிறும் போற்றுமி
னெனைநாட் (உ)டங்குநும் போரே யனைநா
ளெறியா (௩)ரெறிதல் யாவண (௪)தெறிந்தோ
ரெதிர்சென் றெறிதலுஞ் (௫)செல்லா னதனா
௰ லறிந்தோர் யாரவன் கண்ணிய பொருளே
பலமென் றிகழ்த லோம்புமி னுதுக்கா
ணிலனளப் பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவிப் பண்புபா ராட்டி
யெல்லிடைப் படர்தந் தோனே கல்லென
௧௫ வேந்தூர் யானைக் கல்ல
தேந்துவன் (௬)போலான்ற னிலங்கிலை வேலே.

திணையும் துறையும் அவை.

ஆவூர்மூலங்கிழார். (கூ0௧)

---

க. டாவினையு. ௩. அறிதல். ௫. செல்லாது.
உ. தாறு. ௪. அறிந்தோன். ௬. போலாவி.

(௩0௨.) வெடிவேய் கொள்வது போல வோடித்
(க)தாவு புகளு மாவே பூவே
விளங்கிழை மகளிர் கூந்தற் கொண்ட
நரந்தப பலகாழ்க் கோதை (உ)சுற்றிய
௫ வைதமை பாணி வணர்கோட்டுச் சிறியாழ்க்
கைவார் நரம்பின் பாணர்க் கோக்கிய
நிரம்பா வியல்பிற் கரம்பைச் சீறூர்
நோக்கினர்ச் செகுக்கும் காளை (௩)யூக்கி
(௪)வேலின் னட்ட களிறுபெயர்த் தெண்ணின்
௧0 விண்ணிவர் விசும்பின் மீனுந்
தண்பெய லுறையு முறையாற் றுவே.

திணை - அது; துறை - தகிணைமறம்.

வெறிபாடிய காமக்கண்ணியார். (கூ0௨)

---

க. தாவுவகளு. உ. சுற்றியைதமை. ௩. ஊக்கு. ௪. வேலினிட்ட.

(௩0௩.) நிலம்பிறக் கிடுவது போற்குளம்பு கடையூஉ
வுள்ள மொழிக்கும் கொட்பின் மான்மே
லெள்ளுநர்ச் செகுக்கும் காளை கூர்த்த
வெந்திற லெஃகு நெஞ்சுவடு விளைப்ப
௫ வாட்டிக் காணிய வருமே நெருநை
யுரைசால் சிறப்பின் (க)வேந்தர் முன்னாக்
கரைபொரு முன்னீர்த் (உ)திமிலிற் போழ்ந்தவர்
கயந்தலை மடப்பிடி புலம்ப
விலங்குமருப் பியானை யெறிந்த வெற்கே.

திணையும் துறையும் அவை.

எருமைவெளியனார். (கூ0௩)

---

க. வேந்தன். உ. திமிலிற.

(௩0௪.) கொடுங்குழை மகளிர் கோதை சூடி
நடுங்கு (க)பனிக் களைஇயர் நாரரி பருகி
வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி
பண்ணற்கு விரைதி நீயே நெருநை
௫ யெம்முற் றப்பியோன் றம்பியொ டோராங்கு

நாளைச் செய்குவ மமரெனக் கூறிப்
(உ)புன்வயி றருத்தலுஞ் செல்லான் (௩)பன்மான்
கடவு மென்ப பெரிதே யதுகேட்டு
வலம்படு முரசின் வெல்போர் வேந்த
௧௦ னிலங்கிரு மரசறை நடுங்கின்
றிரண்டா காதவன் கூறிய தெனவே.

திணையும் துறையும் அவை.

அரிசில்கிழார். (௩௦௪)

௧. பனிக்கசாஅய். உ. புன்மையிற. ௩. பனமானை.

(௩௦௫.) வயலைக் கொடியின் வாடிய (௧)மருங்கு
லுயவ னூர்திப் பயலைப் பார்ப்பா
னெல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே
௫ யேணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணி(உ)களைந் தனவே.

திணை - வாகை; துறை - பார்ப்பனவாகை.

மதுரைவேளாசான். (௩௦௫)

௧. மருங்கின். உ. களைந்தனனே.

(௩௦௬.) களிறுபொரக் கலங்கு (௧)கழன்முண் வேலி
யரிதுண் கூவ லங்குடிச் சீறூ
ரொளிமெண் கூந்த லொண்ணுத லரிவை
நடுகற் கைதொழுது பரவு மொடியாது
௫ விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையு
மொ...... ......... ......... வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே.

திணை - அது; துறை - மூதின்முல்லை.

அள்ளூர்நன்முல்லையார். (௩௦௬)

௧. கன்முள்வேலி.

(௩௦௭.) ஆசா கெந்தை யாண்டு...............
களிறெறிந்து பட்டோன் வம்பலன் போலத்
தோன்று முதுககாண் வெரினில் வரியணில்
வாலத் தன்ன கான வூகின்
௫ கழன்றுகு முதுவிய ரி.................
.....................ல் லுமயா(௧)துமணர்
யாருமி லொருசிறை முடத்தொடு துறந்த

வாழா வண்பக லெய்ப்பத் (௨)தெறுவர்
(௩)பேருயிர் கொள்ளு மாதோ வடுகளத்
௧௦ தெஞ்சலிற் சிறந்தது பிறிதொன் றில்லெனப்
பண்கொளற் கருமை நோக்கி
நெஞ்சற வீழ்ந்த புரைமை யோனே.

திணை - தும்பை; துறை - ... ..............

...................... ........................... (௩௦௭)

---

௧. மன்ற. ௨. தெறுவரப. பெருயிர்க்கொ.

(௩௦௮.) பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக் குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
௫ வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த வேலே யென்னை
சார்ந்தா ரகல முளங்கழிந் தன்றே
யுளங்கழி சுடர்ப்படை யேந்திநம் பெருவிற
லோச்சினன் றுரந்த காலை மற்றவன்
௧௦ புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே.

திணை - வாகை; துறை - முதின்முல்லை.

கோவூர்கிழார். (௩௦௮)

(௩௦௯.) இரும்புமுகஞ் சிதைய நூறி யொன்னா
ரருஞ்சமங் கடத்த லேனோர்க்கு மெளிதே
நல்லரா வுறையும் புற்றம் போலவுங்
கொல்லே றாடிய மன்றம் போலவு
௫ மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
யுளனென வெரூஉ மோரொளி
வலனுயர் நெடுவே லென்னைகண் ணதுவே.

திணை - தும்பை; துறை - நூழிலாட்டு.

மதுரையிளங்கண்ணிக்கோசிகனார். (௩௦௯)

(௩௧௦.) பால்கொண்டு மடுப்பவு முண்ணா னாகலிற்
செறாஅ தோச்சிய சிறுகோ லஞ்சியொ
டுயவொடு மன்னே யினியே .........
புகர்நிறங் கொண்ட களிறட் டானான்
௫ முன்னாள் வீழ்ந்த வுரவோர் மகனே

யுன்னில னென்னும் புண்ணுஎன் றம்பு
மானுளை யன்ன குடுமித்
தோன்மிசைக் கிடந்த புல்லண லோனே.

திணையும் துறையும் அவை.

பொன்முடியார். (௩௧௦)

(௩௧௧.) களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை
தாதெரு மறுகின் மாசுண விருந்து
பலர்குறை செய்த மலர்தா ரண்ணற்
௫ கொருவரு மில்லை மாதோ செருவத்துச்
சிறப்புடைச் செங்கண் புகையவோர்
தோல்கொண்டு மறைக்குஞ் சால்புடை யோனே.

திணை - அது; துறை - பாடாண்பாட்டு.

ஔவையார். (௩௧௧)

(௩௧௨.) ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
௫ யொளிறுவா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

திணை - வாகை; துறை - மூதின்முல்லை.

பொன்முடியார். (௩௧௨)

(௩௧௩.) அத்த நண்ணிய நாடுகெழு பெருவிறல்
கைப்பொருள் யாதொன்று மிலனே நச்சிக்
காணிய சென்ற விரவன் மாக்கள்
களிற்றொடு நெடுந்தேர் வேண்டினுங் கடல
௫ வுப்போய் சாகாட் டுமணர் காட்ட
கழிமுரி குன்றத் தற்றே
யெள்ளமை வின்றவ னுள்ளிய பொருளே.

திணை - அது; துறை - வல்லாண்முல்லை.

மாங்குடிகிழார். (௩௧௩)

(௩௧௪.) மனைக்குவிளக் காகிய வாணுதல் கணவன்
முனைக்குவரம் பாகிய வென்வே னெடுந்தகை
நடுகற் பிறங்கிய வுவலிடு பறந்தலைப்
புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்

௫ குடியு மன்னுந் தானே கொடிபெடுத்து
(க)நிறையழிந் தெழுதருந் தானைக்குச்
சிறையுந் தானேதன் னிறைவிழு முறினே.

திணையும் துறையும் அவை.
ஐயூர்முடவனார். (கஉச)

க. நிறையழிந்து.

(கஉரு.) உடைய ரைபி னுண்ணவும் வல்லன்
கடவர் மிது மிரப்போர்க் கீயு
மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி
யில்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
௫ தோன்றா திருக்கவும் வல்லன் மற்.........
......... ......... கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்றான் றோன்றுங் காலே.

திணையும் துறையும் அவை.
நெடுமானஞ்சியை ஔவையார். (கஉரு)

(கஉசு.) கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்திக்
காட்டொடு மிடைந்த சீயா முன்றி
னாட்செருக் (க)கனந்தர்த் துஞ்சு வோனே
யவனெம் மிறைவன் யாமவன் பாணர்
௫ நெருநை வந்த விருந்திற்கு மற்றுதன்
னிரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக்
கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்
டுவறி லாளா னென்றுது நீயும்
வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்
௧௦ கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
(உ)சென்றுவாய் சிவந்துமேல் வருக
சிறுகண் யானை வேந்துவிழு முறவே.

திணையும் துறையும் அவை.
மதுரைக்கள்ளிற்கடையத்தன்வெண்ணாகனார். (கஉசு)

க. கனந்தர்த்துஞ்சு. உ. செறுவர்சிவந்து.
செறுநர்சிவந்து.

(கஉஎ.) வெ......... ......... ......... ......நது
முன்றிற் கிடந்த பெருங்களி யாளர்க்
கதனுண் டாயினும் பாயுண் டாயினும்
யாதுண் டாயினுங் கொடுமின் வல்லே

௫ வேட்கை மீளப... ......... .........
......... ......... .........கு மெமக்கும்
பிறர்க்கும் யார்க்கு மீயக்துயிலெறபினனே.

திணையும் துறையும் அவை.
வேம்பற்றூர்க் குமரனார். (௩௧௭)

(௩௧௮.) கொய்யடகு வாடத் தருவிற் குறுக......
மயிலஞ்சாயன் மாஅ யோளொடு
பசித்தன் றம்ம பெருந்தகை யூரே
மனையுறை குரீஇக் கறையணற் சேவல்
௫ பாணர் (௧)நரம்பிசை நிரொடு வயமான
குரலை பீலியி னிளமை(௨)மூத்த குடம்பைப்
பெருஞ்செய் நெல்லி னரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்
யாணர்த் தாகும் வேந்துவிழு முறினே.

திணையும் துறையும் அவை.
பெருங்குன்றூர்கிழார். (௩௧௮)

௧. நரம்பின்சுகிரொடு. ௨. பூத்த.

(௩௧௯.) பூவற் படுவிற் கூவற் (௧)றோண்டிய
செங்கட் சின்னீர் பெய்த சீறின்
முன்றி லிருந்த முதுவாய்ச் சாடி
(௨)யாங்கஃ துண்டென வறிதுமா சின்று
௫ படலை முன்றிற் சிறுதினை யுணங்கல்
புறவு மிதலு மறவு முண்கெனப்
பெய்தற் கெல்லின்று பொழுதே யதனான்
முயல்சுட்ட வாயினுந் தருகுவேம்(௩)புகுந்
தீங்கிருந் தீமே முதுவாய்ப் பாண
௧௦ கொடுங்கோட் டாமா னடுங்குதலைக் குழவி
புன்றலைச் சிறாஅர் கன்றெனப் பூட்டுஞ்
சீறூர் மன்ன னுருநனை ரூங்கர்
வேந்துவிடு தொழிலொடு சென்றனன் வந்துநின்
பாடினி மாலை யணிய
௧௫ வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே.

திணையும் துறையும் அவை.
ஆலங்குடி வங்கனார். (௩௧௯)

௧. றொடிய. ௨. யாதஃதுண. ௩. புகுசீவதிரு.

புதுவர கரிகாற் கருப்பை யெய்த
புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
௫ ......................................மூடைய
முன்றிற் பாயும் வன்புலத் ததுவே
கரும்பி னெந்தஞ் சிலைப்பி னயலிற்
பெருஞ்சுவல் வாளை பிறழு மாங்கட்
பணை......................................
௧௦ ..................யாவேலோ.........ரே.

திணையும் துறையும் அவை.
ஆவூர்கிழார். (௩௨௨)

---

க. வழு.
ஒழு.

(௩௨௩.) புலிப்பாற் பட்ட வாமான் குழவிக்குச்
சினங்கழி மூதாக் கன்றுமடுத் தூட்டுங்
கா......................................க்
குள்ளியது சுரக்கு மோம்பா வீகை
௫ வெள்வே லாவ மாயி னொள்வாட்
கறையடி யானைக் கல்ல
துறைகழி யாவேலோனூரா.............

..................................................
....................................டார்கிழார். (௩௨௩)

(௩௨௪.) வெருக்குவிடை யன்ன வெருணோக்குக் கயந்தலைப்
புள்ளூன் றின்ற புலவுநாறு கயவாய்
வெள்வாய் (க)வேட்டுவர் வீழ்துணை மகாஅர்
சிறியிலை யுடையின் சுரையுடை வான்மு
௫ ளூகநுண் கோற் செறித்த வம்பின்
வலாஅர் வல்விற் குலாவரக் கோலிப்
பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்
புன்புலந் தழீஇய வங்குடிச் சீறூர்க்
குமிழுண் வெள்ளை (உ)பகுவாய் பெயர்த்த
௧௦ வெண்காழ் (௩)தாய (௪)வண்காற் பந்த
ரிடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்
பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை
வலம்படு தானை வேந்தற்
குலந்துழி யுலக்கு நெஞ்சறி துணையே.

தண்ணல் யானை யணிந்த
௧௫ பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே.

திணையும் துறையும் அவை.
*தங்கால் பூட்கோவலனார்.

(௩௨௭.) எருது காலுறா திளைஞர் கொன்ற
(௧)சில்விளை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண ருண்டுகடை தப்பலி
௫ னொக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
(௨)வரகுகட னிரக்கு நெடுந்தகை
யரசுவரிற் றாங்கும் வல்லா ளன்னே.
திணையும் துறையும் அவை.
.........................................

௧. சில்விளை. ௨. வரகுகடனிரக்கு.

(௩௨௮) .........டைமுதற் புறவுசேர்ந் திருந்த
புன்புலச் சீறூர் நெல்விளை யாதே
வரகுந் தினையு முள்ளவை யெல்லா
மிரவன் மாக்கருங் கியத் தொலைந்தன
௫ ..........................டைமைத் தனனே
யன்ன னாயினும் பாண நன்றும்
வள்ளத் திடும்பா லுள்ளுறை தொட......
களவுப் புளியன்ன விளை..................
..............................வா டீனகுறை
௧௦ கொய்குர லரிசியொடு நெய்பெய் தட்டுத்
துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோ
றுண்டினி திருந்த பின்.......................
..............................ருவன்மாதோ
தாளிமுத லீடிய சிறுநறு முஞ்ஞை
௧௫ முயல்வந்து கறிக்கு முன்றிற்
சீறூர் மன்னனைப் பாடினை செலினே.
திணையும் துறையும் அவை.
.........................................

(௩௨௯.) இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லி னாட்பலி யூட்டி

* தங்கால் தாட்கோவலனாரென்றும் பிரதிபேதமுண்டு.

(௧)நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇ
மங்குன் மாப்புகை மறுகுடன் கமழு
௫ மருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்
றரவுறை புற்றத் தற்றே நாளும்
புரவலர் புன்க ணோக்கா திரவலர்க்
கருகா தீயும் வண்மை
யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே.

திணையும் துறையும் அவை.
மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார். (௩௨௯)

௧. நன்னராட்டி.

(௩௩௰.) வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
லேந்துவாள் வலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்
காழி யனையன் மாதோ வென்றும்
௫ பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வண்மை யோனே.

திணையும் துறையும் அவை.
மதுரைக் கணக்காயனார். (௩௩௰)

(௩௩௧.) கல்லுறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தனன் ஆயினும் பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியுங்
௫ கல்லா விடையன் போலக் குறிப்பி
னில்லது படைக்கவும் வல்ல னுள்ளது
தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னா
(௧)னீணெடும் (௨)பந்த ரூண்முறை யூட்டு
மிற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
௧௰ வரிசையி னளிக்கவும் வல்ல னுரிதினிற்
காவன் மன்னர் கடைமுகத் துகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
தூவவும் வல்லனவன் றூவுங் காலே.

திணையும் துறையும் அவை.
உறையூர் முதுகூத்தனார். (௩௩௧)

௧. னீணெடு. ௨. பந்தருண்.

(௩௩௨.) பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
(௧)யிரும்புற (௨)நீறு மாடிக் (௩)கலந்திடைக்
குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கு
௫ மங்கல மகளிரொடு மாலை சூட்டி
யின்குர (௪)லிரும்பை (௫)யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படிவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழா தழுங்கச் செல்லினுஞ் (௬)செல்லுமாங்
கிருங்கடறு தானை வேந்தர்
௧௦ பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னாதே.

திணையும் துறையும் அவை.

விரியூர்நக்கனார். (௩௩௨)

௧. இரும்புக. ௩. கலத்தடை. ௫. யாழெழுந்தியம்ப
௨. நீரு. ௪. இரும்பை. ௬. செல்லுங்கண்ணுறின்.

(௩௩௩.) நீருட் பட்ட மாரிப் பேருறை
மொக்கு ளன்ன பொகுட்டுவிழிக் கண்ண
கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுயா
லுள்ளூர்க் குறும்புதற் றுள்ளுவன வுகளுந்
௫ தொள்ளை மன்றத் தாங்கட் படரி
னுண்டென வுணரா வுயவிற் றாயினுந்
தங்கினிர் சென்மோ புலவீர் நன்றுந்
சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வரகுந் தினையு முள்ளவை யெல்லா
௧௦ மிரவல் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தெனக்
குறித்துமா றெதிர்ப்பை பெறாஅ மையிற்
குரலுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப் பெய்து
சிறிதுபுறப் பட்டன்றோ விலளே தன்னூர்
வேட்டக் குடிதொறுங் கூட்டு...............
௧௫ ..................................உடும்புசெய்
பாணி நெடுந்தேர் வல்வ ரோவே
வம்பணி யானை வேந்துதலை வரினு
முண்பது மன்னு மதுவே
பரிசில் மன்னுங் குரிசில்கொண் டதுவே.

திணையும் துறையும் அவை.

.............................................. (௩௩௩)

(௩௩௪.) ........................பழனக் கம்பி னன்ன
தூமயிர்க் குறுந்தா ணெடுஞ்செவிக் குறுமுயல்
புன்றலைச் சிறாஅர் மன்றத் தார்ப்பிற்
படப்பொடுங் கும்மே.........பின்பு.........
௫ ..........................னூரே மனையோள்
பாண ரார்த்தவும் பரிசில ரோம்பவு
மூணொலி யரவமொடு கைதூ வாளே
யுயர்மருப் பியானைப் புகர்முகத் தணிந்த
பொலம்...............................ப்
௧0 பரிசில் பரிசிலர்க் கீய
வுரவுவேற் காளையுங் கைதூ வாளே.

திணையுந் துறையும் அவை.
மதுரைத் தமிழ்க்கூத்தனார். (௩௩௪)

(௩௩௫.) அடலருந்து..............................
....................குருந்தே முல்லையொன்
றிந்நான் கல்லது பூவு மில்லை
கருங்கால் வரகே யிருங்கதிர்த் தினையே
௫ சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொடு
இந்நான் கல்லது................................
துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை
யொன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
௧0 யொளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெ
.......................................வினல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே.

திணையுந் துறையும் அவை.
மாங்குடிகிழார். (௩௩௫)

(௩௩௬.) வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே
கடவன கழிப்பிவ டந்தையுஞ் செய்யா
னொளிறு முகத்த தேந்திய வீங்குதொடி மருப்பிற்
களிறு கடிமரஞ் சேரா சேர்ந்த
௫ வொளிறுவேன் மறவரும் வாய்மூழ்த் தனரே
யியவரு மறியாப் பல்லியங் கறங்க
வன்றே பெரும்பே துற்றன் றில்லம்
அருங்கடி முதா ரறனின் மன்ற

தானே விறன்மலை....................
௧௦ வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
முகைவனப் பேந்திய முற்றா விளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்ந் திருந்தவிப் பண்பி லூரே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.
பரணர். (௩௪௬)

(௩௪௭.) ஆர்கலி யினனே சோணாட் டண்ணல்
கவிகை மண்ணாள் செல்வ ராயினும்
வாள்வலந் தொழியப் பாடிச் சென்றார்
வாரிறு கமலா............................
௫ வீத லாறு விலங்குகொடித் தடக்கைப்
பாரி பறம்பிற் பனிச்சுனை போலக்
காண்டற் கரிய ளாகி மாண்ட
பெண்மை நிறைந்த பொலிவொடு மண்ணிய
துகில்விரி கடுப்ப நுடங்கித் தண்ணென
௧௦ வகிலார் நறும்புகை யைதுசென் றடங்கிய
கபில நெடுநகர்க் கமழு நாற்றமொடு
மனைச்செறிந் தனளே வாணுத லினியே
யற்றன் றாகலிற் றெற்றெனப் போற்றிக்
காய்நெற் கவளந் தீற்றிக் காவுதொறுங்
௧௫ கடுங்கண் யானை காப்பன ரன்றி
வருத லானார் வேந்தர் தன்னையர்
பொருசமங் கடந்த வுருகெழு நெடுவேற்
குருதி பற்றிய வெருவரு தலையர்
மற்றிவர் மறனு மிற்றாற் றெற்றென
௨௦ யாரா குவர்கொ லுமே நேரிழை
யுரித்தல் பல்சுணங் கணிந்த
மருப்பிள வனமுலை ஞெமுக்கு வோரே.

திணையுந் துறையு மவை.
கபிலர். (௩௪௭)

(௩௪௮.) ஏர்பரந் தவய னீர்பரந் துசெறுவி
னென்மலிந்தமனைப் பொன்மலிந்தமறுகிற்
படுவண் டார்க்கும் பன்மலர்க் காவி
னெடுவே ளாதன் போந்தை யன்ன
௫ பெருஞ்சீ ரருங்கொண் டியளே கருஞ்சினை

வேம்பு மாரும் போந்தையு மூன்று
மலைந்த சென்னிய ரணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினுந் தற்றக
வணங்கார்க் கீகுவ னல்லன் வண்டோட்டுப்
௧௦ பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்
(க)றுணங்குகல ருழியிற் றேன்று
மோரெயின் மன்ன னொருமட மகளே.

திணையும் துறையும் அவை.

குன்றூர்கிழார்மகனார். (௩௩௮)

---

௧. உணங்குகாழி.

(௩௩௯.) வியன்புலம் படர்ந்த பல்லா நெடுவேறு
படலை மாணிழ லசைவிடக் கோவல
ரத்தை முல்லைப் பூப்பறிக் குந்து
குறுங்கோ லெறிந்த நெடுஞ்செவிக் குறுமுய
௫ னெடுநீர்ப் பரப்பின் வாளையொ டுகளுந்து
தொடலை யல்குற் றொடித்தோண் மகளிர்
கடலாடிக் கயம்பாய்ந்து
கழிநெய்தற் பூக்குறூஉந்து
பைந்தழை துயல்வருஞ் செறுவிற......
௧௦ ...............................லத்தி
வளர வேண்டு மவளே யென்று
மாரமர் ருழப்பது மமரிய ளாகி
முறஞ்செவி யானை வேந்தர்
மறங்கெழு நெஞ்சங் கொண்டொளித் தோளே.
.......................................
....................................... (௩௩௯)

(௩௪௦.) அணித்தழை நுடங்க வோடி (க)மணிப்பொறிக்
(உ)குரலங் குன்றி கொள்ளு மிளையோள்
மாமகள்....................................
..................லென வினவுதி கேணி
௫ வெடுப்பவெ.............................
.........................மைந்தர் தந்தை
யிரும்பனை யன்ன பெருங்கை யானை
கரந்தையஞ் செறுவிற் பெயர்க்கும்
பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந் தனனே.

திணையும் துறையும் அவை.
அ...................................... (௩௪௦)

௧. பணிப்பொறி. ௨. கூரலங்குன்றி.

(௩௪௧.) ......................டாஅ னேந்துகோட்
டம்பூந் தொடலை யணிந்ததழை யல்குற்
செம்பொறிச் சிலம்பி னிளையோ டந்தை
யெழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவி
௫ னரைமணி குசிரா.......................
.........கணைத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்ற மாறான் மறலிய சினத்தன்
பூக்கோ ளென்ப கயம்புக் கனனே
விளங்கிழைப் பொலிந்த வெ...ாமெல்லியற்
௧௦ சுணங்கணி வனமுலை ..................ண்
மணம்புகு வைக லாகுத லொன்றோ
வாரம ருழக்கிய மறங்கிளர் முன்பி
னீணிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுத லொன்றெனப்
௧௫ படைதொட் டனனே குரிசி லாயிடைக்
களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
பெருமகவி னிழப்பது கொல்லோ
மென்புனல் வைப்பினித் தண்பணை யூரே.

திணையும் துறையும் அவை.
பரணர். (௩௪௧)

(௩௪௨) கானக் காக்கைக் கலிசிற மேய்க்கு
மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமக
ளேனோர் மகள்கொ லிவளென விதுப்புற்
றென்னொடு வினவும் வென்வே னெடுந்தகை
௫ திருநயத் தக்க பண்பினிவ ணலனே
பொருநர்க் கல்லது பிறர்க்கா காதே
பைங்காற் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை
மென்சேற் றடைகரை மேய்ந்துண் டதற்பி
னார லீன்ற வையவி முட்டை
௧௦ கூர்ந விறவின் பிள்ளையொடு பெறூஉந்
தண்பணைக் கிழவனிவ டந்தையும் வேந்தரும்
பெறாமை யின்மையிற் பேரமர் செய்தலிற்
பிணம்பி றங்குபோ ரழிகளி றெருகா

வாட்கை வைகலு முழக்கு
கரு மாட்சி யிலரிவ டன்னை மாரே.
திணையும் துறையும் அவை.
அரிசில்கிழார். (ஙசஉ)

(ஙசங.) மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
(க)மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும்மைய கரைகலக்குறுந்து
ரு கலந்தந்த பொற்பரிசங்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமுந்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
கo முழங்கடன் முழவின் முசுறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையல ளிவளெனத்
தந்தையுங் கொடாஅ னாயின் வந்தோர்
வாய்ப்பட விறுத்த வேணி யாயிடை
கரு வருந்தின்று கொல்லோ தானே பருந்துயிர்த்
திடைமதிற் சேக்கும் புரிசைப்
படைமயங் காரிடை நெடுந லூரே.
திணையும் துறையும் அவை.
பரணர். (ஙசங)

---

க. மனைமறுக்குவைஇய.

(ஙசச.) செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை
செறிவளை மகளி ரோப்பலிற் (க)பறந்தெழுந்து
(உ)துறைநணி மருதத் திறுக்கு மூரொடு
நிறைசால் விழுப்பொரு டருத லொன்றோ
ரு புகைபடு கூரெரி பரப்பிப் பகைசெய்து
பண்பி லாண்மை தருத லொன்றோ
விரண்டினு ளொன்று காமையோ வரிதே
காஞ்சிப் பனிமுறி யாரங் கண்ணி
கணிமேவந்தவளல்குலவ்வரியே.
திணையும் துறையும் அவை.
.................... அடைநெடுங்கல்லியார். (ஙசச)

---

க. பிறந்தெழுந்து. உ. துறைநணி.

(௩௪௫.) களிறணைப்பக் கலங்கினகாஅ
தேரோ டத்துகள் கெழுமின தெருவு
(க)மாமறுகலின் மயக்குற்றன, வழி
கலங்கழாஅலிற், றுறை, கலக்குற்றன
௫ தெறன்மறவ ரிறைகூர்தலிற்
பொறைமலிந்து நிலனெளிய
வந்தோர் பலரே வம்ப வேந்தர்
பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பி
னோவுற ழிரும்புறங் காவல் கண்ணிக்
௧0 கருங்கண் கொண்ட நெருங்கல் வெம்முலை
மைய னோக்கிற் றையலை நயந்தோ
ரளியர் தாமேயிவ டன்னை மாரே
செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்
௧௫ கழிப்பிணிப் பலகையர் (உ)கதுவாய் வாளர்
குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
கழாஅத் தலைய கருங்கடை நெடுவே
(௩)லின்ன மறவர்த் தாயினு மன்னோ
வென்னா வதுகொ றானே
௨0 (௪)பன்னல் வேலியிப் பணைநல் லூரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர். (௩௪௫)

---

க. மாவழங்கலின்.
உ. ததுவாய்.
௩. இன்னம்பிறவர்த்தாயினும.
௪. பன்னெல்வேலி.

(௩௪௬.) பிற..............ளபாலென மடுத்தலி
ளீன்ற தாயோ வேண்டா ளல்லள்
கல்வி யென்னும் வலலாண சிறாஅ
னொல்வ..................ரது குடியே
௫ யழிந்தோ ரழிய வொழிந்தோ ரொக்கல்
பேணுநர்ப் பெறாஅது விளியும்
புன்றலைப் பெரும்பாழ் செய்யுமிவ ளலமே.

திணையும் துறையும் அவை.

அண்டர்மகன் குறுவழுதி. (௩௪௬)

(௩௪௭.) உண்போன் றான்றுகள ளிணிட சில
நாவிடைப் பஃறே கொலச சிவந்த

வொளிறெளவாடக்குழைத்தலைத் தும்பை
பெறிக்கிலை முரிந்த கதுவா...............
ரு மணநாறு மார்பின் மறப்போ ரகுதை
குண்டுநீர் வரைப்பிற் கூட லன்ன
குவையிருங் கூந்தல் வருமு மணநாறு
மார்பின்மறப்போராலெசபப
வென்று வதுகொ ளுனே சேந்த
௪0 சினைநீர் வரைப்பிற் கூட லன்ன
விளங்குழைய வாயினும் வேந்தர்
வினைநவில் யானை பிணிப்ப
வேர்துளங் கினநம் மூருண் மரனே.

திணையும் துறையும் அவை.

கபிலர். (௩௪௭)

(௩௪அ.) வெண்ணெல் ரிஞர் தண்ணுமை வெரீஇக்
கணணக தொண்ட ழிந்தே னிரியக்
கள்ளரிக் குங்குயஞ் சிறுமீன் வீழும்
பாண்சேரி வாய்மொழித் தழும்பனா ரன்ன
ரு குவளை யுண்க ணரிவளைத் தாயே
யினு ளாயின ளாயி னுறைது
நிழறுறு நெடுந்தோ நிப்ப வயின்றுறைந்
செந்நுதல் யானை பிணிப்ப
வருதன் மன்னெம் பெருந்துறை மரனே.

திணையும் துறையும் அவை.

பரணர். (௩௪அ)

(௩௪௯.) நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக
கடிய கூறும வேந்தே தந்தையு
நெடிய வல்லது பணிந்துமொழி யலனே
யிஃதிவர் படிவ மாயின் வையெயிற்
ரு றரிமதர் மழைக்க ணம்மா வரிவை
மரம்படு சிறுதீப் போல
வணங்கா யினடான் பிறந்த வூர்க்கே.

திணையும் துறையும் அவை.

மதுரை மருதனிளநாகனார். (௩௪௯)

(௩௫0.) தூர்ந்த கிடங்கிற் சோர்ந்த ஞாயிற்
சிதைந்த விஞ்சிக் கதுவாய் மூதூர்

யாங்கா வதுகொ ருனே தாங்காது
படுமழை யுருமி னிரங்கு முரசிற்
ரு கடுமான் வேந்தர் காலை வந்தெந்
நெடுநிலை வாயிற் கொட்குவர் மாதோ
பொருந்தா தமருவ ரல்லர் போருழந்
தடுமுரண் முன்பிற் றன்னைய ரேந்திய
வடிவே லெஃகிற் சிவந்த வுண்கட்
க௦ டொடிபிறழ் முன்கை யிளையோ
ளணிநல் லாகத் தரும்பிய சுணங்கே.

திணையும் துறையும் அவை.
மதுரையோலைக்கடைக்கண்ணம்புகுந்தாராயத்தனார். (ருஉ௦)

(ருஉக.) படுமணி மருங்கின பணைத்தாள் யானையுங்
கொடிநுடங்கு மிசைய தேரு மாவும்
படையமை மறவரொடு துவன்றிக் கல்லெனக்
கடல்கண் டன்ன கண்ணகன் றானை
ரு வென்றெறி வேந்த ரென்னுமு.........
ண்கை யெயினன் வாகை யன்ன
விவணலந் தாரா தமைகுவ ரல்ல
ரென்னா வதுகொ ருனே தெண்ணீர்ப்
பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
க௦ தேங்கொண் மருதின் பூஞ்சினை முனையிற்
காமர்நாஞ்சி..............................
மேமஞ்சால் சிறப்பினிப் பணைநல் லூரே.

திணையும் துறையும் அவை.
மதுரைப்படைமங்கமன்னியார். (ருஉக)

(ருஉஉ.) தேஎங்கொண்ட வெண்மண்டையான்
வீ..........................கறக்குந்து
அவல்வகுத்த பசுங்குடையாற்
புதன்முல்லைப் பூப்பறிக்குந்து
ரு ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப் புனற்பாயிற்
புனல்வள..........................
.....................நொடைநறவின்
மாவண் டித்தன் வெண்ணெல் வேலி
க௦ யுறந்தை யன்ன வுரைசா லன்கலங்
கொடுப்பவுங் கொடாஅ னென.........

.........ர்தந்த நாவிள வேங்கையிற்
கதிர்த்தொளி திகழு நுண்பல் சுணங்கின்
மாக்கண் மலர்ந்த முலைய டன்னையுஞ்
௧௫ சிறுகோ லுலையும் புரவிெ............
..................................பமரே.

திணையும் துறையும் அவை.
பரணர். ([illegible])

(௩௫௩.) ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த
பொலஞ்செய் பல்கா சணிந்த வல்குல்
ஈகைக் கண்ணி யிலங்கத் தைஇத்
தருமமொ டியல்வோள் சாய னோக்கித்
௫ தவிர்த்த தேரை விளர்த்த கண்ணை
வினவ லானா வெல்போ ரண்ணல
யார்மக ளென்போய் கூறக் கேளினிக்
குன....................நிலைப்பல போர்பு
நாட்கடா வழித்த நனைத்தலைக் குப்பை
௧௦ வல்வி லிளையர்க் கல்குபத மாற்றாத்
தொல்குடி மன்னன் மகளே முன்னாட்
கூஉய் வந்த மாமுது வேந்தர்க்கு
......................................
.........யுருக்கிக் குருதி யோட்டிக்
௧௫ கதுவாய் போகிய நுதிவா யெஃகமொடு
பஞ்சியுங் களையாப் புண்ண
ரஞ்சுதக வுடையரிவ டன்னை மாரே.

திணையுந் துறையும் அவை.
காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். ([illegible])

(௩௫௪.) அரசு தலைவரினு மடங்க லொரு
நிரைகா ழெஃக நீரின் மூழ்கப்
புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
௫ கயலார் நாரை யுகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை யொய்யு
மூர்கவி னிழப்பவும் வருவது கொல்லோ
சுணங்கணிந் தேந்திய வணைத்தேந் திளமுலை
வீங்கிறைப் பணைத்தோண் மடந்தை
௧௦ மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே.

திணையும் துறையும் அவை.

பாணர். (௩௱௫௪)

(௩௱௫௫.) மதிலு ஞாயி லின்றே கிடங்கு
நீஇ ரின்மையிற் கன்றுமேய்ந் துகளு
மூரது நிலைமையு மிதுவே
........................................
..................................................
.................................................. (௩௱௫௫)

(௩௱௫௬.) பனிபழுநிய பல்யாமத்துப்
பாறுதலை மயிர்நனைய
வினிது துஞ்சுந் திருநகர் வரைப்பி
னினிய லகற்றவென் கிணைதொடாக் குறுகி
௫ வவியுணவினோர் புறங்காப்ப
வறநெஞ்சத்தோன் வாழ்நாளென்
றதற்கொண்டு வரலேத்திக்
கரவில்லாக் கவிவண்கையான்
வாழ்கவெனப் பெயர்பெற்றோர்
௧௦ பிறர்க்குவமந் தானல்லது
தனக்குவமம் பிறரில்லென
வதுநினைந்து மதிமழுங்கி
யாங்குநின்ற வெற்கனாஉச்
சேய்நாட்டுச் செல்கிணைஞனை
௧௫ நீபுரவலை யெமக்கென்ன
மலைபயந்தமணியுங் கடறுபயந்தபொன்னுங்
கடல்பயந்த கதிர்முத்தமும்
வேறுபட்டவுடையுஞ் சேறுபட்டதசும்புங்
கனவிற்கண்டாங்கு வருந்தாதுநிற்ப
௨௦ நனவி னல்கியோ னசைசா றோன்றல்
நாடென மொழிவோரவ னாடென மொழிவோர்
வேந்தென மொழிவோரவன் வேந்தென மொழிவோர்
காதல ரழுகண்ணீ
ரென்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
௨௫ வெல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
ம........................................
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.

திணையும் துறையும் அவை.

கதையங்கண்ணனார். (௩௱௫௬)

(௩௫௭.) குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத்தமண்
பொதுமை சுட்டிய மூவ ருலகமும்
பொதுமை யின்றி யாண்டிசி னோர்க்கும்
மாண்ட தன்றே யாண்டுகள் துணையே
௫ வைத்த தன்றே வெறுக்கை வி......
.....................................னை
புணைகை விட்டோர்க் கரிதே துணையழத்
தொக்குயிர் வௌவுங் காலை
யிக்கரை நின்றிவர்க் கொண்டனை கொளலே.

திணை - அது; துறை - ............... பெருங்காஞ்சியுமாம்.

பிரமனார். (கசு)

(௩௫௮.) பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநில
மொருபக லெழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக்
கையவி யனைத்து மாற்றா தாகலிற்
௫ கைவிட் டனரே காதல ரதனால்
விட்டோரை (க)விடாஅ டிருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.

திணை - அது; துறை - மனையறந் துறவறம்.

வான்மீகையார். (கசு)

க. விடாஅதிரு.

(௩௫௯.) பாறுபடப் பறைந்த பன்மா றருங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
பேஎ மகளிர் பிணந்தழூஉப் பற்றி
௫ விளரூன் றின்ற வெம்புலான் மெய்யர்
களரி மருங்கிற் கால்பெயர்த் தாடி
யீம விளக்கின் வெருவரப் பேருங்
காடுமுன் னினரே நாடுகொண் டோரு
நினக்கும் வருத லவைகல் லற்றே
௧௦ வசையு நிற்கு மிசையு நிற்கும்
அதனால், வசைநீக்கி யிசைவேண்டியு
நசைவேண்டாது நன்றுமொழிந்து
நிலவுக்கோட்டுப் பலகளிற்றொடு
பொலம்படைய மாமயங்கிட
௧௫ விழைகிளர் நெடுந்தேர் இரவலர்க் கருகாது

கொள்ளென விடுவை யாயின் வெள்ளென
வாண்டுநீ பெயர்ந்த பின்னு
மீண்டுநீடு விளங்குநீ யெய்திய புகழே.

**திணை - அது, துறை - பெருங்காஞ்சி.**
**அந்துவன்கீரனைக்காவட்டனார்.** (௩ ...

(௩௬௦.) பெரிதாராச் சிறுசினத்தர்
சிலசொல்லாற் பலகேள்வியர்
நுண்ணுணர்வினாற் பெருங்கொடையர்
கலுழ்நனையாற் றண்டேறலர்
௫ கனிகுய்யாற் கொழுந்துவையர்
தாழுவந்து தழூஉமொழியர்
பயனுறுப்பப் பலர்க்காற்றி
யேம மாக விந்நில மாண்டோர்
சிலரே பெரும கேளினி நாளும்
௧௦ பலரே தகையஃ தறியா தோரே
யன்னோர் செல்வமு மன்னி நில்லா
தின்னு மற்றதன் பண்பே யதனா
னிச்சமு மொழுக்க முட்டிலை பரிசி
னச்சுவர் கையி னிரப்ப லோம்புமதி
௧௫ யஞ்சுவரப், பாறிறை கொண்ட பறந்தலை மாக்க
களளி போகிய களரி மருங்கின்
வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு
புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி
புலைய னேவப் புன்மே லமர்ந்துண்
௨௦ டழல்வாய்ப் புக்க பின்னும்
பலர்வாய்த் திராஅர் பகுத்துண் டோரே.

**திணையும் துறையும் அவை.**
**தந்துமாறனைச் சங்கவருணரென்னு நாகரியர்பாடியது** (௩௬௦)

(௩௬௧.) காரெதிர் ருருமி னுரறிக் கல்லென, வாருயிர்க் கலமரு மாராக்
கூற்ற, நின்வர வஞ்சலன் மாதோ நன்பல, கேள்வி முற்றிய
வேள்வி யந்தணர்க், கருங்கல நீரொடு சிதறிப் பெருந்தகைத்,
தாயின்னன்று பலர்க்கீத்துத, தெருணடைய மாகளிறொடுதன்,
றுள்பாடுநர்க்கு நன்கருளியு, முருணடை.....................
............ான்றதன், றுள்சேருநர்க் கினிதீத்தும், புரிமாலையா
பாடினிக்கும், பொலந்தாமரைப் பூம்பாணரொடு, கலந்தலைஇய
நீனிருக்கையாற், பொறையொ....................மாணுக்கின்

அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
௰ கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்க
ணுப்பிலாஅ வவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோ னீயப்பெற்று
௧௫ நிலங்கல னாக விலங்குபலி மிசையு
மின்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.

திணையும் துறையும் அவை.
..................ஐயாதிச் சிறுவெண்டேரையார். (௩௬௩)

(௩௬௪.) வாடா மாலை பாடினி யணியப்
பாணன் சென்னிக் கேணி பூவா
வெரிமரு டாமரைப் பெருமலர் தயங்க
மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்
௫ காயங் கனிந்த கண்ணகன் கொழுங்குறை
நறவுண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப
வுண்டுந் தின்று மிரப்போர்க் கீந்து
மகிழ்கம் வம்மோ மறப்போ ரோயே
யரிய வாகலு முரிய பெரும
௰ நிலம்பக வீழ்ந்த வலங்கற் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுவென வியம்பும்
கூகை கோழி யானாத்
தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே.

திணையும் துறையும் அவை.
அவனைக் கூகைக்கோழியார். (௩௬௪)

(௩௬௫.) மயங்கிருங் கருவிய விசும்பு (க)முகனாக
வியங்கிய விருசுடர் கண்ணெனப் பெயரிய
(உ)வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம
வயிரக் குறட்டின் (௩)வயங்குமணி யாத்துப்
௫ பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்
பொருநர்க் காணாச் செருமிகு முன்பின்
முன்னோர் செல்லவுஞ் செல்லா தின்னும்

௫ பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி தேறல்.....................மகிழ்ந்
திரவலர்க் கருங்கல மருகாது வீசி
வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
௧௦ வாழச் செய்த நல்வினை யல்ல
தாழுங் காலைப் புணைபிறி தில்லை
யொன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தர்
௧௫ யானறி யளவையோ விதுவே வானத்து
வயங்கித் தோன்று மீனினு மிம்மென
வியங்கு மாமழை யுறையினு
முயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநுந் நாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சேரமான்மாவெண்கோவும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதியும், சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை ஔவையார். (௩௬௭)

(௩௬அ.) களிறு முகந்து பெயர்குவ மெனினே
யொளிறுமருப் பேந்திக் குன்றம் போலக்
கைம்மா வெல்லாங் கணையிடத் தொலைந்தன
கொடிஞ்சி நெடுந்தேர் முகக்குவ மெனினே
௫ கடும்பரி நன்மான் வாங்குவயி றொல்கி
நெடும்பீ டழிந்து நிலஞ்சேர்ந் தனவே
கொய்சுவற் புரவி முகக்குவ மெனினே
மெய்ந்நிறைந்த வடுவொடு பெரும்பிறி தாகி
வளிவழக் கறுத்த வங்கம் போலக்
௧௦ குருதி யம்பெரும் புனல்கூர்ந் தனவே
யாங்க, முகவை யின்மையி னுகவை யின்றி
யிரப்போ ரிரங்கு...வெறு வியன்களத்
தாளழிப் படுத்த வாளே ருழவ
கடாஅ யானைக் கால்வழி யன்னவென்
௧௫ றெடாரித் தெண்கண் டெளிர்ப்ப வொற்றிப்
பாடி வந்த தெல்லாங் கோடியர்
முழவுமரு டிருமணி மிடைந்த
நின்வுறு மார முகக்குவ மெனவே.

திணை - வாகை; துறை - மறக்களவழி.

சேரமான்குடக்கோநெடுஞ்சேரலாதன் சோழன்வேற்பஃறடக்கைப்பெருநற் கிள்ளியொடு போர்ப்புறத்துப்பொருதுவீழ்ந்தாரங்கழுத்தன்னதாக உயிர்போகாது கிடந்தானைக் கழாத்தலையார். (௩௬௮)

(௩௬௯) இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் பமைந்த
௫ குருதிப் பலிய முரசுமுழக் காக
வரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
௧௦ யீரச் செறுவயிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்ந்த திருத்துறு செஞ்சாற்
பிடித்தெறி வெள்வேற் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
௧௫ பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்க்
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
௨௦ வேய்வை காணா விருந்திற் போர்வை
யரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
௨௫ வோடை நுதல வொல்குத லறியாத்
துடியடிக் குழவிப் பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா வீகைத் தகைவெய் யோயே.

திணையும் துறையும் அவை; துறை - ஏர்க்கள உருவகமுமாம்.
சேரமான்கடலோட்டிய வேல்கெழுகுட்டுவனைப் பரணர். (௩௬௯)

(௩௭௦.) ........................................ளி
நாரும் போழுஞ் செய்துண் டோராங்குப்

பசித்தனத் திரங்கிய விரும்பே ரொக்கற்
கார்பதங் கண்மனை மாதிரந் துழைஇ
ரு வேருழந் துலறி மருங்குசே...... கொழிய
வத்தக் குடிஞை துடிமரு ாகுர
லுழுஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
பெடைபயிர் குரலோ டிசைக்கு மாங்கட்
கழைகாய்ந் துலறி............................
க0 வரிமரற் றிரங்கிய கானம் பிற்படப்
பழுமர முள்ளிய பறவை போல
வொண்படை மாரி வீழ்கனி பெய்தெனத்
துவைத்தெழு குருதி நிலமிசைப் பரப்ப
விளைந்த ......குர லரிந்துகால் குவித்து
கரு ..............பல்போர் பழிய வாய்வே
யெருதுகளி றாக வாண்மட லோச்சி
யதரி திரித்த வாளுறு கடாவி
னகன்கட் டடாரி தெளிர்ப்ப வொற்றி
வெந்திறல் வியன்களம் பொலிகென் றேத்தி
உ0 யிருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பின்
வளைமருண் முகவைக்கு வந்தனென் பெரும
வடிநவி லெஃகம் பாய்ந்தெனக் கிடந்த
தொடியுடைத் தடக்கை யோச்சி வெருவா
ரினத்தடி விராய வரிக்குட ரடைச்சி
உரு யழுகுரற் பேய்மக ளயரக் கழுகொடு
செஞ்செவி யெருவை திரிதரு
மஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணையும் துறையும் அவை.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்போதிபசுங் குடையார். (ருஎ0)

(ருஎக.) அகன்றலை வையத்துப் புரவற் காணாது
மரந்தலைச் சேர்ந்து பட்டினி வைகிப்
போதவி ழலரி நாரிற் றொடுத்துத்
தயங்கிரும பித்தை பொலியச் சூடிப்
ரு பறையொடு தகைத்த கலப்பையென் முரவுவா
யாடுறு குழிசி பாடின்று தூக்கி
மன்ற வேம்பி னொண்பூ வுறைப்பக்
குறைசெயல் வேண்டா நசைய விருக்கையே

னரிசி யின்மையி னாரிடை நீந்திக்
க0 கூர்வா யிரும்படை நீரின் மிளிர்ப்ப
வருகணை ய......வரியன் பின்றுதலைஇ
யணாசுரும் பார்க்கு முனைசால் பாசறை
வில்லே ருழவநின் னல்லிசை யுள்ளிக்
குறைத்தலைப் பிணனெதிர்ப் போர்பழித்து
கரு யானை யெருத்தின் வாண்மட லோச்சி
யதரி திரித்த வாடுறு கடாவின்
மதியத் தன்னவென் விசியுறு தடாரி
யகன்க ணதிர வாகுளி தொடாலிற்
பணையமருதெனநின் றதாட் பல்பிணர்த் தடக்கைப்
உ0 புகர்முக முகனைச் சுவந்திசிற் பெரும
களிற்றுக் கோட் டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விராஅய வெண்ணிணச் சுவையினள்
குடர்த்தலை மாலை சூடி யுணத்தின
வாஅய்ப் பெருவளஞ் செய்தோன் வானத்து
உரு வயங்குபன் மீனினும் வாழியர் பலவென
வுருகெழு பேய்மக ளயரக்
குருதித் துகளாடிய களங்கிழ வோயே.

திணையுந் துறையு மவை.
தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் கல்லாடனார். (கூஎக)

(கூஎஉ.) விசிபிணித் தடாரி விம்மென வொற்றி
யேத்தி வந்த தெல்லை முழுத்த
விலங்குவா ளவிரொளி வயமடையின் னலக்
கழுந்தாழ் பொழிந்த கண்கூடு பாசறைப்
ரு பொருந்தாத் தெவ்வ ரிருந்தலை யடுப்பிற்
கூவிள விறகி னாக்குவரி துடுப்பி
னாடுற மண்டை வலனேர்பு திரிப்ப
வருவெண் மாமிசந் துழந்து தடவு
மாப்பிழி பிண்டம் வாழ்வல வெனந்த
க0 வதுவை விழுவிற் புதுவோர்க் கெல்லாம்
வெவ்வாய்ப் பெய்த புதுநீர் சால்கெனப்
புலவுக்களம் பொலிய வேட்டோய்நின்
னிலவுத்திக ழார முகக்குவ மெனவே.

திணை - வாகை; துறை - மறக்களவேள்வி.
அவனை மாங்குடிகிழார். (கூஎஉ)

(௩௭௩.) உருமிசை முரச முழக்கென விசைப்பச்
செருநவில் வேழங் கொண்மூ வாகத்
தேர்மா வளிதுளி தலைஇ நாமுறக்
கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை
௫ யிழிதரு குருதியொ டேந்திய வொள்வாட்
பிழிவது போலப் பிட்டையூ றுவப்ப
மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்
கொங்கு புறம்பெற்ற கொற்றவேந்தே
........................தண்ட மாப்பொறி
௰ மடக்கண் மயிலியன் மறலி யாங்கு
நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்றோண் மகளிர் மன்றம் பேணா
புண்ணுவ.............................................
........................யணிப் புரவி வாழ்கெனச்
௰௫ சென்னிற விளைமையி னன்னிறச் சேர
ரண்புண் மார்பிற் புன்றலைச் சிறாஅ
ரம்பழி பொழுதிற் றமர்முகங் காணூ
...... . ...................... ற் றெருக்கான
வேழப் புறங்கொடுத்த விருந்துகு பாந்தலை
௨௰ மாட மயங்கெரி மண்டிக் கோடிறு
புருமெரி மலையி னிருவிளஞ் சேரச்
சென்றோன் மன்ற சொல...............
...........ண்ணறிநர் கண்டுகண் ணலைப்ப
வஞ்சி முற்றம் வயக்கள னாக
௨௫ வருசா மறவ ராட்போர் பழித்துக்
கொண்டனை பெரும குடபுலத் ததரி
பொலிக வந்தைநின் பணைநுனைப்... ..ளம்
விளங்குதிணை வேந்தர் களந்தொறுஞ் சென்று
புகாமுக முகவை பொலிகென் றேத்தித்
௩௰ தொண்ட ரென்ப பெரியோர் யானு
மங்கண் மாக்கிணை யதிர வொற்ற
........ ......லெனாயினுங் காதலி னேத்தி
நின்றோர் பிறரிவ ணின்மையின் ....... ..
மன்னெயின் முகவைக்கு வந்திசிற பெரும
௩௫ பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு

கணைக்கழி திரிதரு மாக்க ளிணைவருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
யஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணை - அது; துறை - மறக்களவழி; ஏர்க்கள உருவகமுமாம்.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன் கருவூரெறிந்தானைக் கோவூர்கிழார். (௩௭௩)

(௩௭௪.) கானன் மேய்ந்து வியன்புலத் தல்கும்
புல்வா யிரலை நெற்றி யன்ன
பொலமிலங்கு சென்னிய பாறுமயி ரவியத்
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
௫ மன்றப் பலவின் மால்வரை பொருந்தியென்
றெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
யிருங்கலை யோர்ப்ப விசைஇக் காண்வரக்
கருங்கோற் குறிஞ்சி யடுக்கம் பாடப்
புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்
௧0 மான்கண் மகளிர்க் கான்றே ரகன்றுவா
சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை
விடர்முகை யடுக்கத்துச் சினைமுதிர் சாந்தம்
புகர்முக வேழத்து மருப்பொடு மூன்று
மிருங்கேழ் வயப்புலி வரியதள் குவைஇ
௧௫ விருந்திறை நல்கு நாடனெங் கோன்
கழறொடி யாஅ யண்டிரன் போல
வண்மையு முடையையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசும்பி னானே.

திணை - பாடாண்டிணை; துறை - பூவைநிலை.

ஆயி அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார். (௩௭௪)

(௩௭௫) அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி
நிலைதளர்வு தொலைந்த வொல்குநிலைப் பல்காற்
பொதியி லொருசிறைப் பள்ளி யாக
முழாஅரைப் போந்தை யரவாய் மாமடல்
௫ ஞாரும் போழுங் கிணையொடு சுருக்கிப்
பேரின வாழ்நர் குடிமுறை புகாஅ
வூழிரந் துண்ணு முயவல் வாழ்க்கை
புரவெதிர்ந்து கொள்ளுஞ் சான்றோ ரியாரெனப்
பிரசந் தூங்கு மறாஅ யாணர்

க0 ரவனா யணிப்படப்பை நன்னாட்டுப் பொருந
பொய்யா வீகைக் கழறொடி யாஅய்
யாவரு மின்மையிற் கிணைப்பதந் தாவது
பெருமழை கடற்பரந் தாஅங்கு யானு
மொருநின் னுள்ளி வந்தனெ னதனாற்
கரு புலவர் புக்கி லாகி நிலவரை
நிலீய ரத்தை நீயே யொன்றே
நின்னின்று வறுவி தாகிய வுலகத்து
நிலவன் மாரோ புரவலர் துன்னிப்
பெரிய வேத்தினுஞ் சிறிய வுணராப்
உ0 பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

அவனை அவர். (கூஎ

(கூஎசு.) விசும்பு நீத்த மிறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் மழுகிய சிவந்துவாங் கந்திச்
சிறுநனி யிறந்த பின்றைச் செறிபிணிச்
சிதாஅர் வள்பினென் றடாரி தழீஇப்
ரு பாண ராரு மளவை யான்றன்
யாணர் நன்மனைக் கூட்டுமுத னின்றனெ
னிமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்
குணக்கெழு திங்கள் கனையிரு ளகற்றப்
பண்டறி வாரா வுருவோ டென்னரைத்
க0 தொன்றுபடு துளையொடு பருவிழை போகி
நைந்துகரை பறைந்தவென் னுடையு நோக்கி
விருந்தின னளிய னிவனெனப் பெருந்தகை
(ச)நின்ற முரற்கை நீக்கி நன்று
மரவுவெகுண் டன்ன தேறலொடு சூடுதருபு
கரு நிரயத் தன்னவென் வறன்களைந் தன்றே
யிரவி னானே யீத்தோ னெந்தை
யன்றை ஞான்றினோ டின்றி னூங்கு
மிரப்பச் சிந்தியே னிரப்படு புணையி
னுளத்தி னளக்கு மிரந்த கையே
உ0 னிறைக்குளப் புதவின் மகிழ்ந்தன னாகி
ஒருநாள், இரவலர் வரையா வள்ளியோர் கடைத்தலை

ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
தோன்றல் செல்லாதென் சிறுகிணைக் குரலே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

ஓய்மான்நல்லியாதனைப் புறத்திணைநன்னாகனார். (௩௭௬)

௧. கிணைமூரற்.
கின்றமூரற்கைசீக்கி.

(௩௭௭.) .................................................... பொற்கோட்டு
யானையரியக்கவாபரிக் (௧)கச்சைநன்மான் (௨)வடிமணிவாங்கு
சினைநற்போர்க்குழுவின (௩)கதழிசை வனத்தனிவுலா வினைவாழ்
நரார்வமொமமனாட்டநடலொளிகொண்டகாவியாடலபொலி
குருசினீமன்னியநெடிதே.

திணை - அது ; துறை - வாழ்த்தியல்.

சோழன் இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளியை உலோச்சனார். (௩௭௭)

௧. கச்சமை. ௨. வடிமணியாங்குருண.
௩. கதழ்பரி.................. உண்டிக்கடலொலிகோசமா.

(௩௭௮.) தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய
தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா கடைஇய விடுபரி வடிம்பி
௫ னற்றார்க் கள்ளிற் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீணகர் நின்றென்
னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
யெஞ்சா மரபின் வஞ்சி பாட
௧௦ வெமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்
௧௫ செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரு
மரைக்கமை மரபின மிடற்றியாக் குநரு
மிடற்றமை மரபின வரைக்கியாக் குநருங்
கடுந்தே ரிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
௨௦ நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்

செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ வருகவை யினிதுபெற் றிகுமே
யிருங்கிளைத் தலைமை யெய்தி
யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே.

திணை - அது; துறை - இயன்மொழி.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதிபசுங் குடையார். (கூஎ௩)

(கூஎகூ.) யானே பெறுகவன் றாணிழல் வாழ்க்கை
யவனே பெறுகவென் னாவிசை நுவற
னெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கிற்
பின்னை மறத்தோ டரியக் கல்செத்
(ரு) தள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்சு
செல்லமல் புறவி னிலங்கை கிழவோன்
வில்லி யாதன் கிணையேம் பெரும
குறுந்தா ளேற்றைக் கொழுங்க ணவ்விளர்
நறுநெய் யுருக்கி நாட்சோறி...............
கo வல்ல னெந்தை பசிதீர்த் தல்லெனக்
கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன் கூறக்
கேட்டதற் கொண்டும் வேட்கைதண் டாது
விட்டோய் தலைய குன்றம் பின்பட
.....................கனென் யானே தாயி
கரு றாவாக் குழவி போல வாங்கத்
திருவுடைத் திருமனை யைதுதோன்று கமழ்புகை
வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்குங்
குறும்ப.........நெதொடகழி நீண்மதி லூரே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

ஓய் மான்வில்லியாதனைப் புறத்திணைநன்னாகனார். (கூஎகூ)

(கூஅo) தென்பவ வத்து முத்துப் பூண்டு
வடகுன்ற..................................
..............................ங்கடற் றனை
யின்னிசை விறல்வென்றித்
(ரு) தென்னவர் வயமறவன்
மிசைப்பெய்த நீர் கடற்பரந்து முத்தாகுந்து
நாறிதழ்க் குளவியொடு கூதளங் குழைய

வெறுப்ப..............................தந்து
தீஞ்சுளைப் பலவி னுஞ்சிற் பொருநன்
க௦ றுப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் செம்மைய
னட்பெதிர்ந் தோர்க்கே யங்கை நண்மையன்
வல்வேற் கந்த னல்லிசை யல்ல
......................த்தார்ப் பிள்ளையஞ் சிறாஅ
ரன்ன ளுகன் மாறே யிந்நில
கரு மிலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே.

திணை - பாடாண்டிணை : துறை - இயன்மொழி.

நாஞ்சில்வள்ளுவனைக் கருவூர்க் கதப்பிள்ளை. (கூஅ௦)

(கூஅக) ஊனூனு முனையி னினிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
மளவுபு கலந்து மெல்லிது பருகி
விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாகச்
ரு சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென
யாந்தன் னறியுந மாகத் தான்பெரி
தன்புடை மைமையி னெம்பிரி வஞ்சித்
துணரியது கொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
பயம்பகர் வறியா மயக்கரின் முதுபாழ்ப்
க௦ பெயல்பெய் தன்ன செல்வத் தாங்க
ணியா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
யூனுகிர் வலந்த தெண்க ணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலைப் பாணியி
கரு னிலம்பா டறியா யாவது புலம்பொடு
தெருமர லுயக்கமுந் (க)தீர்க்குவோ மதனா
லிரு(உ)நிலன் கூலம் பாறக் (ங)கோடை
வருமழை (ச)முழக்கிசைக் கோடியர் பின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினு
உ௦ மிதற்கொண் டறிநை வாழியோ கிணைவ
சிறுநனி, ஒருவழிப் படர்கென் றோனே யெந்தை
யொலிவெள் ளருவி வேங்கட நாட
னுறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பியின் மானப் பிறப்பிறன்

உரு திருங்கோ ளீராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதன் மகனே.

திணையுந் துறையும் அவை.
கரும்பனூர்கிழானை நன்னாகனார். (கூஅக)

க. நீர்குவேனதனல். கூ. கொண்டவருமழை.
உ. நிலங்கடலம். ச. முழக்கிடைக்.

(கூஅஉ) கடற்படை யடற்கொண்டி
மண்டுற்ற மறனொன்றுட
டண்சோழ நாட்டுப்பொருந
னலங்குளை யணியிவுளி
ரு நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல்வேண்டே
மவற்பாடுதுமவன் றாள்வா ழியவென
நெய்குய்ய வூனவின்ற
பலசோற்றா னின்சுவைய
க0 நல்குரவின்பசித்துன்பின்பனிள
முன்னாள் விட்ட மூதறி சிறாஅரும
யாணர்மே மணியங் கேழணி யுத்திக்
கட்கேள்விக் கவைநாவி
னிறனுற்ற வராஅப்போல
கரு வறனொரீஇ வயங்குவாய்ப்ப
விடுமதி யத்தை கடுமான் றோன்ற
னினதே, முந்நீ ருடுத்தவிவ் வியனுல கறிய
வெனதே கிடைக்கா ழன்னவெண் டெண்கண் மாக்கிணைக்
கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோ
உ0 லெறிதொறு நுடங்கி யாங்குநின் பகைஞர்
கேட்டொறு நடுங்க வேத்து
வென்ற தோபிறர் வேத்தவை யானே.

திணை - அது; துறை - கடைநிலை.
சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார். (கூஅஉ)

(கூஅகூ) ஒண்பொறிச் சேவ லெடுப்பவேற் றெழுந்து
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோற் சிறுகிணை சிலம்ப வொற்றி
நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்
ரு தன்புக ழேத்தினெ னாக வூன்புலந் ........

யான்றண்டவு (௨)மூன்றண்டா
௧௫ நிணம்பெருத்த கொழுஞ்............
.....................................
நீர்நாண நெய்வழங்கிப்
புரந்தோ னெந்தை யாமலகத்தொலை.........
யன்னோனை யுடையேமெனபவற.........
௨௦ கியாண்டு நிற்க வெள்ளி மாணட
வுண்டநன்கலம் பெய்துநுடக்கவுந்
தின்றநண்ப (௩)னூன்றோண்டவும்
வந்த வைக லல்லது
சென்ற வெல்லைச் செலவறி யேனே.

திணையும் துறையும் அவை.
கரும்பனூர்கிழானைப் புறத்திணைநன்னாகனார். (௩௮௪)

---

௧. பாலாற்கு. ௨. மதான்றண்டா. ௩. னூன்றொனறணடவு.

(௩௮௫.) வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
புலரி விடியற் பகடுபல வாழ்த்தித்
தனவட தொன்றினு மிலனே பிறன்கடை
யகன்கட் டடாரிப் பாடுகேட் டருளி
௫ வறனியா ளிங்கல் வேண்டி யென்னரை
நிலத்தின் சிதார்களைந்து
வெளிது ஈஇயென் பசிகளைந் தோனே
காவிரி கணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி யம்பர் கிழவோ
௧௦ னல்லரு வந்தை வாழியர் புல்லிய
வேங்கட விறல்வரைப் பட்ட
வோங்கல் வானத் துறையினும் பலவே.

திணை - அது ; துறை - வாழ்த்தியல்.
அம்பர்கிழான் அருவந்தையைக் கல்லாடனார். (௩௮௫)

(௩௮௬.) நெடுநீர நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவுஞ்
சூடு கிழித்து வாடூன் மிசையவு
௫ மூன்கொண்ட வெண்மண்டை
யாண்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது

செய்தொழிலான் வியர்ப்பறியாமை
யீத்தோ னெந்தை யிசைதன தாக
௧௦ வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் பூத்த தும்பை
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று
கடலேகரந்த கலனெண் ணுவோர்
௧௫ கானற் புன்னைச் சினைநிலைக் குத்து
கழியே, சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கன் னாட் டுமணொலிக்குந்து
அன்னநன் னாட்டுப் பொருநம் யாமே
பொராஅப் பொருநரேம்
௨௦ குணதிசை நின்று குடமுதற் செலினுங்
குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தெனவயிற் செலினுந்
தென்றிசை நின்று குறுகாது நீடினும்
யாண்டு நிற்க வெள்ளி யாம்
௨௫ வேண்டிய துணர்ந்தோன் றாள்வா ழியவே.

திணையுந் துறையும் அவை.
சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர்கிழார். (௩௮௬)

அஎ.) வள்ளுகிர வயலாமை
வெள்ளக டுகண்டன்ன வீங்குவிசிப் புதுப்போர்வைத்
தெண்கண் மாக்கிணை யியக்கி யென்று
மாறுகொண்டோர் மதிலிடறி
௫ நீறாடிய நறுங்கவுள
பூம்பொறிப் பணையெருத்தின
வேறுவேறு பரந்தியங்கி
வேந்துடைமிளை யயல்பரக்கு
மேந்துகோட் டிரும்பிணர்த்தடக்கைத்
௧௦ திருந்துதொழிற் பலபகடு
பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
னகைப்புல வாணர் நல்குர வகற்றி
மிகப்பொலியர்தன்சேவடியத்தை
யென்றியா னிசைப்பினனிநன்றெனா
௧௫ பலபிறன வாழ்த்த விருந்தோ ரெங்கோ
மிருவவினகரகனறிருந்துகழற்

சேவடி குறுகல் வேண்டி
வென்றி ரக்கும் விறன்முரசினோ
னென்சிறுமையி னிழித்துநோக்கான்
௨௰ றன்பெருமையிற் றகவுநோக்கிக்
குன்றகம் களிறென்கோ
கொ..................ாவென்கோ
மன்றுநிறையு நிரையென்கோ
மனைக்களமரொடு களமென்கோ
௨௫ ஆங்கவை, கனவென மருள வல்லே நனவி
னல்கி யோனே நசைசா றோன்ற
னாழி....................................
பூழியர் பெருமபியானைச்
செருமிகு நோன்றாட் செல்வக் கடுங்கோ
௩௰ வாழி யாத னென்னுந் தெவ்வ
ருயர்குடை பணித்திவண் விடுவார் மாதோ
நெடிதே, நி......வஞ்சிப் புறமதி லலைக்குங்
கல்லென் பொருநை மணலினு மாங்கட்
பல்லூர் சுற்றிய கழனி
௩௫ யெல்லாம் விளையு நெல்லினும் பலவே.

திணையும் துறையும் அவை.

சேரமான் சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோவாழியாதனைக் குண்டுகட்பாலியாதன். (௩௮௭)

(௩௮௮.) வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை
யிரும்பறைக் கிணைமகன் சென்றவன் பெரும்பெயர்
..............................பொருந்தித்
௫ தன்னிலை யறியுந ளாக வந்நிலை
யிடுக்க ணிரியல் போக வுடைய
கொடுத்தோ னெந்தை கொடைமேந் தோன்ற
னுமருப்பாக, வெல்லும் வாய்மொழிப் புல்லுடைவி
.........பெயர்க்கும்பணணாகவெட[illegible]ொரமககிொன
௧௰ விளைப்பக டேத்து மேனி நிணத்தொடர்
காவொடு மும் பாடே னாயினே னாக
நாஞ்சு, மணிகிளர் முன்றிற் றென்னவன் மருகன்
பிணிமுர சிரங்கும் பீடுகெழு தானை

பண்ணன் யானை வாழ்கவென
கரு மாறி வயவரென் பெருங்கிளைப் புரவே.

திணை - அது; துறை - இயன்மொழி.

சிறுகுடிகிழான்பண்ணனை மதுரை அளக்கர்ஞாழார்மகனார் மள்ளனார். (கூஅஅ)

(கூஅகூ.) நீர்நுங்கின் கண்வலிப்பக்
கானவேம்பின் காய்திரங்கக்
கயங்களியுங் கோடையாயினு
மேலா வெண்பொன் போகுறு காலை
ரு யெம்மூ முன்னுமோ பின்னையம் பொருக
வென்றித் தனனே யிசைசா னெடுந்தகை
யின்றுசென் றெய்தும் வழியது மல்லன்
செலிசேனை காணு வழியது மல்லன்
புன்றலை மடப்பிடி யினையக் கன்றுதந்து
க0 குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்குங்
கல்லிழி யருவி வேங்கடங் கிழவோன்
செல்வுழி யெழாஅ நல்லேர் முதிய
னாதனுங்கன் போல நீயும்
பசித்த வொக்கற் பழங்கண் வீட
கரு வீறுசா னன்கல நல்குமதி பெரும
வைதக லல்குள் மகளிர்
நெய்தல்கே ளன்மார் நெடுங்கடை யானே.

திணையும் துறையும் அவை.

ஆதனுங்கனைக் கள்ளில்ஆத்திரையனார். (கூஅகூ)

(கூகூ0.) அறவை நெஞ்சத் தாயர் வளரு
மறவை நெஞ்சத் தாயி வாள
ரரும்பலர் செருந்திநெடுங் கான்மலர் கமழு
மன்னமுற்றத், தார்வலர் குறுகி னல்லது காவலர்
ரு கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்
னரிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்
பாடி நின்ற பன்னா ளன்றியுஞ்
சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்
க0 வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருந னளியன் றானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை

முதுநீர்ப் பாசி யன்ன வுடைகளைந்
ததிரும வானன்ன புதுமடிக் கொளீஇ
௧௫ மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியு
மமிர்தன மரபி னூன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட லன்றி
முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை
யிரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்றக்
௨௦ கடுங்கண் வேங்கை வீகண் டன்ன
படுதரு செங்கெற் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே யுண்டுறை
மலையல ரணியுந் தலைநீர் நாடன்
கண்டாற் கொண்டுமனை திருந்தடி வாழ்த்தி
௨௫ வரனறி யலவென் பாடுபசி போக்க
லண்ணல் யானை வேந்த
ருண்மையோ வறியல காண்பறி யலரே.

திணையும் துறையும் அவை.

அதியமானெடுமானஞ்சியை ஔவையார். (௩௯௦)

(௩௯௧.) தண்டுளி பலபொழிந் தெழிலி யிசைக்கும்
விண்டு வனைய விண்டோய் பிறங்கன்
முகடுற வுயர்ந்த நெல்லின் கிழ்வரப்
பகடுதரு பெருவளம் வாழ்த்திப் பெற்றதிருந்தா
௫ மூரிபரந்துபட கெண்டி யரிய லார
கெ............ய லார்தைய றுண்டினி துவக்கும்
வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
வீங்குவந் திறுத்தவெ னிரும்பே ரொக்கல்
தீர்கை விடுக்கும் பண்பின் முதுகுடி
௧௦ னன.........................................
வினவலின் முன்னும் வந்தோன் மருங்கி
னின்னுமன் னுகலிற் பொருந னிவனென
நின்னுணர்ந் தறியுந ரென்னுணர்ந்து கூறக்
காண்கு வந்திசி..............................
௧௫ ............பெருங்கழி நுழைமீ னருந்துந்
துதைந்த தூவியம் புதாஞ் சேக்குந்
தந்தை, தந்தபுன யானின செழுநகர் வரைப்பி
னெஞ்சமர் காத னின்வெய் யோளொ
டின்றுயி............................ஞ்சா

௨௦ ரரிபத னமைந்த பொழிய
வேலி யாயிரம் விளைகநின் வயலே.

திணை - அது ; துறை - கடைநிலை.

பொறையாற்றுகிழானைக் கல்லாடனார். (௩௯௧)

(௩௯௨.) மதியேர் வெண்குடை யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
௫ யொருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
வுருகெழு மன்ன ராரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்
தணங்குடை மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
௧௦ வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ வாழிய பெரிதெனச்
சென்றியா னின்றனெ னாக வன்றே
யூருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
௧௫ நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்ணெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
யூண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
௨௦ தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே.

திணையுந் துறையும் அவை.

அதியமான்மகன் பொகுட்டெழினியை ஔவையார். (௩௯௨)

(௩௯௩.) பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி
யடனசை மறந்தவெங் குழிசி மலர்க்குங்
௫ கடனறி யாளர் பிறநாட் டின்மையின்
வள்ள னமையின் வரைவோர் யாரென
வுள்ளிய வுள்ளமொ டுலைநசை துணையா
கலக மெல்லா மொருபாற் பட்டென

மலர்தா ரண்ணனி னல்லிசை யுள்ளி
௧0 யீர்ங்கை மறந்தவெ னிரும்பே ரொக்கல்
கூர்ந்த வெவ்வம்விடக் கொழுநிணங் கிழிப்பக்
கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த
மூடைப் பண்ட மிடைநிறைந் தன்ன
வெண்ணிண மூரி யருள நாளுற
௧௫ வீன்ற வரவி னாருக் கடுக்குமென்
றொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
வகன்றுமடி கலிங்க முடீஇச் செல்வமுங்
கேடின்று நல்குமதி பெரும மாசின்
௨0 மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
யாடுமக ளல்குலொப்ப வாடிக்
கோடை யாயினுங் கோடி.................
காவிரி புரக்கு நன்னாட்டுப் பொருந
வாய்வாள் வளவன் வாழ்கெனப்
௨௫ பீடுகெழு நோனாள் பாடுகம் பலவே.

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனை நல்லிறையனார். (௩௯௩)

(௩௯௪.) சிலையுலா நிமிர்ந்த சாந்துபடு மார்பி
னொலிபுனற் கழனி வெண்குடைக் கிழவோன்
வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்
வள்ளிய னாதல் வையகம் புகழினு
௫ முள்ள மோம்புமி னுயர்மொழிப் புலவீர
யானும், இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை
யொருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
௧0 வகமலி யுவகையொ டணுகல் வேண்டிக்
கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழ நல்கின னஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
௧௫ பெருங்களிறு நல்கி யோனே யதற்கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினுந்

அன்னரும் பரிசில் தருமென

வென்றாங்கு செல்வேனவன் குன்றுகெழு நாட்டே.

திணையும் துறையும் அவை.

கடைநிலையாயினவெல்லாம் பாடாண்டிணை.

சோழியவேனாதித்திருக்குட்டுவனைக் கோனாட்டு எறிச்சலூர்மாடலன்மதுரைக் குமரனார். (கூகச)

(நூகூரு.) வயலுழவர் வன்புலத்துப்
பகடுவிட்டுக் குறுமுயலின்
குழைச்சூட்டொடு நெடுவாளைப்
பல்லுவியற் பழஞ்சோற்றைப்
(ரு) புகவருந்திப் புதற்றளவின்
பூச்சூடி..........................
......................அரியலாருந்து
மனைக்கோழிப் பைம்பயிரின்னே
கானக்கோழிக் கவர்குரலொடு
(க0) நீர்க்கோழிக் கூய்ப்பெயர்க்குந்து
வேயன்ன மென்றோளால்
மயிலன்ன மென்சாயலார்
கிளிகடியின்னே
அகலள்ளற் புள்ளிரீஇயுந்து
(கரு) ஆங்கப், பலநல்ல புலனணியுஞ்
சீர்சான்ற விழுச்சிறப்பிற்
சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்
செ.....................உறந்தைக் குணாது
நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூ
(உ0) ரறப்பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும
முன்னா ளெண்பகற் சுரனுழந்து வருந்திக்
கதிர்நனி சென்ற.........................மாலைத்
தன்கடைத் தோன்றி யென்னுறா விசைத்தலிற்
றீங்குரல்...........கிணைக்குரற் றடாரியொ
(உரு) டாங்குநின் றெற்கண்டு
சிறிதுநில் லான் பெரிதுவந் தறு
னருக்கலமர வரவே யருளினன் வேண்டி
யென்னுரைத் தன்றி நல்கித் தன்மனைப்
பொன்போன் மடந்தையைக் காட்டி யிவனை
(கூ0) யென்போற் போற்றென் றோனே யதற்கண்

டன்மறவலேனே பிறருள்ளலேனே
யகன்ஞாலம் பெரிதுவெம்பினு
மிகவானு ளெரிதோன்றினுங்
குளமீனொடுந் தாட்புகையினும்
௩௫ பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்
பசுங்கட் கருனைச் சூட்டொடு மாந்தி
விளைவெனவேண்டா வெள்ளங்கொள்கென
வுள்ளது மில்லது மறியா
தாங்கமைந் தன்றால் வாழ்கவன் றாளே.

திணையும் துறையும் அவை.
சோழநாட்டுப் பிடவூர்கிழார்மகன் பெருஞ்சாத்தனை மதுரைநக்கீரர். (௩௯௫)

(௩௯௬.) கீழ்நீரான் மீன்வழங்குந்து
மீநீராற் கண்ணன்ன மலர்பூக்குந்து
கழிசுற்றிய விளைகழனி
யரிப்பறையாற் புள்ளோப்புந்
௫ துண்டுநீர்கூஉ மணற்றண்கான்
மென்பறையாற் புள்ளிரியுந்து
நனைக்கள்ளின் மனைக்கோசர்
தீந்தேற னறவுமகிழ்ந்து
தீங்குரவைக் கொளைத்தாங்குந்து
௧௦ வுள்ளிலோர்க்கு வலியாகுவன்
கேளிலோர்க்குக் கேளாகுவன்
கழுமியவேளே
வளநீர் வாட்டாற் றெழினி யாதன்
கிணையேம்பெரும, கொழுந்தடிய சூடென்கோ
௧௫ வளநனையின் மட்டென்கோ
குறுமுயலி னிணம்பெய்தந்
நறுநெய்ய சோறென்கோ
திறந்துமறந்த கூட்டுமுதன்
முகந்துகொள்ளு முணவென்கோ
௨௦ வனையவைபலபல.....................
...................................ருந்தய
விரும்பேரொக்க லிருஞ்செஞ்சிய
வழித்தவப்ப வீத்தோனெந்தை
யெம்மோராக்கக் கங்குண்டே
௨௫ மாரிவானத்து மீனாப்பண்

விரிகதிர வெண்டிங்களின்
விளங்கித் தோன்றுகவவன் கலங்கா நல்லிசை
யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
நிரைசா னன்கல னல்கி
௩0 யுரைசெலச் சிறக்கவவன் பாடல்சால் வளனே.

திணையும் துறையும் அவை.
வாட்டாற்றெழினியாதனை மாங்குடிகிழார். (௩௯௬)

(௩௯௭.) வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளு
முயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே
பொய்கையும் போதுகண் விழித்தன பைபயச்
சுடருஞ் சுருங்கின் றொளியே பாடெழுந்
௫ திரங்குகுரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப
விரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி
யெஃகிரு ளகற்று மேமப் பாசறை
வைகறை யரவங் கேளியர் பலகோட்
செய்தார் மார்ப வெழுமதி துயிலெனத்
௰ தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
நெடுங்கடைத் தோன்றி யோனே யதுநயக்
துள்ளி வந்த பரிசில னிவனென
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்
௧௫ பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரி யன்ன வண்மையிற் சொரிந்து
வேனி லன்னவென் வெப்பு நீங்க
வருங்கல நல்கி யோனே யென்றுஞ்
செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை
௨0 யறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன் வாய்வாள்
வலம்படு தீவிற் பொலம்பூண் வளவ
னெறிதிரைப் பெருங்கட லிறுதிக்கட் செலினுந்
தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினு
௨௫ மென்னென் றஞ்சலம் யாமே வென்வே
லருஞ்சமங் கடக்கு மாற்றலவன்
றிருந்துகழ னோன்றாட் டண்ணிழ லேமே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்விடை; கடைநிலைவிடை.
சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனை எருக்காட்டூர்த்தாயங்கண்ண
னார். (௩௯௭)

(௩௯௮.) மதிநிலாக் கரப்ப வெள்ளி யேர்தர
வகைமா ணல்லிற........................
பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்பப்
பொய்கைப் பூமுகை மலரப் பாணர்
௫ கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க
விரவுப் புறம்பெற்ற வேம வைகறைப்
பரிசிலர் விசையெ......................
வரிசையி னிறுத்த வாய்மொழி வஞ்ச
னகைவர் குறுகி னல்லது பகைவர்க்குப்
௧௦ புலியின மடிந்த கல்லளை போலத்
துன்னல் போகிய பெரும்பெயர் மூதூர்
மதியத் தன்ன வென்.........றரிக்குடாரி
யிரவுள்ளார் நெடுவா ரிம்ப ரவட்டித்
துள்ளி வருநர் கொள்கல நிறைப்போய்
௧௫ தள்ளா நிலையை யாகிய ரெமக்கென
வென்வர வறீஇய சிறிதிற்குப் பெரிதுவந்து
விரும்பிய முகத்த னாகி யென்னரைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்னரைப்
புகைவிரிந் தன்ன பொங்கு துகிலுடீஇ
௨௦ யழல்கான் றன்ன வரும்பெறன் மண்டை
நிழல்காண் டேற னிறைய வாக்கி
யானுண வருள லன்றியுந் தானுண்
மண்டைய கண்ட மான்வறைக் கருனைக்
கொக்குகிர் நிமிர லொக்க லார
௨௫ வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி யொளிர்வரு மரவுறழ் ஆரமொடு
புரையோன் மேனிப் பூத்தசல.................
முரைசெலவருளியோனே
........................யருவிப் பாயற் கோவே.

திணை - அது; துறை - கடைநிலை.
சேரமான்வஞ்சனைத் திருத்தாமனார். (௩௯௮)

(௩௯௯.) அடுமகள் முகந்த வளவா வெண்ணெற்
றொடிமா ணுலக்கைப் பருஉக்குற் றரிசி
காடி வெள்ளுலைக் கொளீஇ நீழ
லோங்குசினை மாவின் றீங்கனி நறும்புளி
௫ மோட்டிரு வராஅற் கோட்டுமீன் கொழுங்குறை

செறுவின் வள்ளை சிறுகொடிப் பாகற்
பாதிரி யூழ்முகை யவிழ்விடுத் தன்ன
மெய்களைந் தினனொடு விரைஇ .........
மூழ்ப்பப் பெய்த முழுவவிழ்ப் புழுக்கல்
௧0 .........களர்ப் படுகர் கலியட வைமிற்
பழஞ்சோ றயிலு முழங்குநீர்ப் படப்பைக்
காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவ னுள்ளி யவற்படர்துஞ்
செல்லேன் செல்லேன் பிறர்முக நோக்கே
௧௫ னெடுங்கழைத் தூண்டில் விடுமீ னொடுத்துக்
கிணைமக ளட்ட பாலாற் புளியங்கூழ்
பொழுதுமறுத் துண்ணு முண்டியே னழிவுகொண்
டொருசிறை யிருந்தே னென்னே யினியே
யறவ ரறவன் மறவர் மறவன்
௨0 மள்ளர் மள்ளன் றொல்லோர் மருக
னிசையிற் கொண்டா னசையமு துண்கென
மீப்படர்ந் திறந்து வன்கோன் மண்ணி
வள்பரிந்து கிடந்த ........... மணக்க
விசிப்புறுத் தமைந்த புதுக்காழ்ப் போர்வை
௨௫ யலகின் மாலை யார்ப்ப வட்டித்துக்
கடியு முணவென்னக் கடவுட்குந் தொடேன்
கடுந்தேர்ப் பள்ளற் கசாவா நோன்சுவற்
பகடே யத்தையான் வேண்டிவந் ததுவென
வொன்றியான் பெட்டா வளவை யன்றே
௩0 வான்று விட்டன னத்தைய விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை
யூர்தியொடு நல்கி யோனே சீர்கொள
விழுமென விழிதரு மருவி
வான்றோ யுயர்சிமைய தோன்றிக் கோவே.

திணை - அது; துறை - பரிசில்விடை.

தாமான்தோன்றிக்கோனை ஐயூர்முடவனார். (௩௯௯)

(௪00.) மாகவிசும்பின் வெண்டிங்கள்
மூவைந்தான் முறைமுற்றக்
கடல்நடுவட் கண்டன்னவென்
னியமிசையா மரபேத்திக்

௫ கடைத்தோன்றிய கடைக்கங்குலாற்
பலர்துஞ்சவுந் தான்றுஞ்சா
னுலகுகாக்கு முயர்ெ................க்
கேட்டோ னெந்தையென் றெண்கிணைக் குரலே
கேட்டதற் கொண்டும் வேட்கைதண் டாது
௧௦ தொன்றுபடு சிதா றருங்கு நீக்கி
மிகப்பெருஞ் சிறப்பின் வீற............
.....................................ல்வன
கலிங்க மழித்ததோட் டொன்னை நோக்கி
காரரித்த கறவுமகிழ்ந்து
௧௫ போதறியேன் பதிப்பழகவுந்
தன்பகை கடித லன்றியுஞ் சேர்ந்தோர்
பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ
மறவர் மலிந்தத ..........................
கேள்வி மலிந்த வேள்வித் தூணத்
௨௦ திருங்கழி யிழிதரு ............ கலிவங்கந்
தெறுநீர்ப் பரப்பின் யாறற சித்துத்
துறைதொறும் பிணிக்கு நல்லூ
ருறைவின் யாண.........கிழவோனே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.
சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார். (௪௦௦)

புறநானூறு முற்றிற்று.

# பாட்டு முதற்குறிப்பகராதி.

[பின்வரும் எண்கள் பாட்டைக் குறிப்பன.]

# பாட்டு முதற்குறிப்பகராதி.



முதலில்லாதபாட்டுக்கள் :—

உஎஎ, ருகஎ, ருஉஉ, ருஉஅ, ருருச, ருசக, ருசரு, ருஎ0, ருஎஎ.

முற்றுமில்லாதபாட்டுக்கள் :—

உருஎ, உருஅ.

சிலபாட்டுக்களின் பிற்பாகமும் சிலபாட்டுக்களின் இடைப்பாகமும் பிரதிகளிற் கிடைக்கவில்லை.

ண்ணின்றன்று.' —புறப்பொருள் வெண்பாமாலை, தும்பைப்படலம், ௧௩.

ஏர்க்களவுருவகம் :—௩௬௧, ௩௭௩.

ஏறாண்முல்லை :—௮௬, ௨௬௬. ஏறாண் முல்லையாவது - எதிரில்லாதபடி ஆண்மைத்தன்மை மேன்மேல் ஏறுகின்ற குடியொழுக்கத்தினை உயர்த்திச்சொல்லுதல்; 'மாறின்றி மனங்கனலு - மேறாண்குடியெடுத்துரைத்தன்று.'— புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், ௨௨.

கடவுள்வாழ்த்து : — ௧. கடவுள்வாழ்த்தாவது - அயன்முதலிய மும்மூர்த்திகளுள் ஒருவரை உயர்த்திச்சொல்லுதல்; 'காவல் கணணிய கழலோன் கைதொழு - மூவரி லொருவனை யெடுத்துரைத் தன்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம, ௩.

கடைநிலை : — ௧௨௭, ௩௮௨, ௩௮௩, ௩௮௪, ௩௯௧, ௩௯௨, ௩௯௩, ௩௯௪.

குடிநிலையுரைத்தல் :—௨௯௦. குடிநிலையுரைத்தலாவது - பழமையிலும் வீரத்திலும் புகழ்பெற்ற குடியின்வரலாற்றைச்சொல்லுதல்; 'மண்டிணி ஞாலத்துத் தொன்மையு மறனுங் - கொண்டு பிறாறியுங் குடிவர வுரைத்தன்று.' — புறப்பொருள்வெண்பாமாலை, கரந்தைப்படலம், ௧௪.

குடைமங்கலம் : — ௯௦. குடைமங்கலமாவது - அரசன்குடையைப்புகழ்ந்து சொல்லுதல்; 'காற்றிசையும் புகழ் பெருக - வீற்றிருந்தான் குடைபுகழ்ந் தன்று.'— புறப்பொருள்வெண்பாமாலை, பாடாண்படலம், ௩௪.

குதிரைமறம் : — ௨௭௩, ௨௯௯, ௩௦௨, ௩௦௩, ௩௦௪. குதிரைமறமாவது - ஒரு வீரனுடைய குதிரையின்மறத்தைக் கூறுதல்; 'எறிபடையா னிகலமருட் - செறிபடைமான் றிறங்கிளர்ந்தன்று.'— புறப்பொருள் வெண்பாமாலை, தும்பைப்படலம், ௭.

குறுங்கலி :—௧௪௩, ௧௪௪, ௧௪௫, ௧௪௬, ௧௪௭. குறுங்கலியாவது - வேறுமகளிரைவிரும்பிய ஒருவனுடைய காதல்கெடும்படி சொல்லுதல; 'காதிருங் கூந்தன் மகளிரை நயப்ப - வேறுபடு வேட்கை வீயக் கூறின்று' — புறப்பொருள்வெண்பாமாலை,இருபாற்பெருந்திணை, ௧௮.

கையறுநிலை :—௯௫, ௧௧௨, ௧௧௩, ௧௧௪, ௧௧௫, ௧௧௬, ௧௧௭, ௧௧௮, ௧௧௯, ௧௨௦, ௨௧௭, ௨௧௮, ௨௧௯, ௨௨௦, ௨௨௧, ௨௨௨, ௨௨௩, ௨௨௪, ௨௨௫, ௨௨௬, ௨௨௭, ௨௩௦, ௨௩௧, ௨௩௨, ௨௩௩, ௨௩௪, ௨௩௫, ௨௩௬, ௨௩௭, ௨௩௮, ௨௩௯, ௨௪௦, ௨௪௧, ௨௪௨, ௨௪௩, ௨௯௦, ௨௯௧, ௨௯௩, ௨௯௪, ௨௯௫, ௨௭௦. கையறுநிலையாவது - அரசனிறப்ப அவனைச்சேர்ந்தோர் அவ்விறந்துபாட்டைச்சொல்லி ஒழுக்கந்தளர்தல்; 'செய்கழன்மன்னன் மாய்ந்தெனச்சேர்ந்தோர் - கையற வுரைத்துக் கைசோர்ந் தன்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், ௧௪.

கொற்றவள்ளை: — ௪, ௭, ௪௧, ௯௮. கொற்றவள்ளையாவது - அரசனுடைய கீர்த்தியைச்சொல்லி அவன் பகைவர் தேசங்கெடுதற்கு வருந்துதல்; 'மன்னவன் புகழ்கிளந் - தொன்னார்நா டழிபிரங்கின்று.' — புறப்பொருள்வெண்பாமாலை, வஞ்சிப்படலம், ௮.

செருமலைதல் : — ௨௫௯. செருமலைதலாவது - வெட்சியாரைக்கிட்டி அவர் அஞ்சத்தாக்கி மிக்க போர்செய்தலை மேற்கொள்ளுதல்; [வெட்சியார்-பசுக்களைக்கவர்ந்தோர்] 'வெட்சியாரைக் கண்ணுற்றவரை - யுட்குவரத்தாக்கி யுளர்செருப்புரிந்தன்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தைப்படலம், ௪.

செருவிடைவீழ்தல் : — ௨௭௧, ௨௭௨. செருவிடைவீழ்தலாவது - அகழியையும் காவற்காட்டையுங்காத்து இறந்த வீரருடைய வெற்றியைச்சொல்லுதல்; 'ஆழ்ந்துபடுகிடங்கி னருமிளைகாத்து - வீழ்ந்தவேலோர் விறன்மிகுத் தன்று.'— புறப்பொருள்வெண்பாமாலை, நொச்சிப்படலம், ௪.

செவியறிவுறூஉ :—௨, ௩, ௫, ௯, ௩௫, ௪௦, ௫௫. செவியறிவுறூஉவாவது - மாற்சரியமும் கெடுதலுமில்லாத பெரிய வண்ணத்தை அரசனுக்குச்சொல்லுதல்; 'மறந்திரிவில்லா மன்பெருஞ்சூழ்ச்சி - யறந்தெரிகோலாற் கறிவுரைத்தன்று.' — புறப்பொருள்வெண்பாமாலை, பாடாண்படலம், ௩௩.

னிய பரிசி லிதுவென வுரைத்தன் று.'—புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், ௫.

பழிச்சுதல் : — ௮௩, ௮௪, ௮௫.

பாடாண்பாட்டு :—௨௬௦, ௨௮௩, ௨௮௪, ௩௩௩. பாடாண்பாட்டாவது - ஒருவனுடைய ஒளி ஆற்றல் ஈகை அளி என்னுமிவற்றை ஆராய்ந்துசொல்லுதல்; 'ஒளியு மாற்றலு மோம்பா வீகையு - மளியு மெனறிவை யாய்ந்துரைத் தன்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், ௧.

பாணாற்றுப்படை : — ௬௮, ௬௯, ௭௦, ௧௩௮, ௧௪௩, ௧௫௫, ௧௮௦. பாணாற்றுப்படையாவது - மலைவழியிற் பாணனை வழிப்படுத்துதல்; 'சேணோங்கிய வரையதரிற் - பாணனை யாற்றுப் படுத்தின்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், ௨௮.

பார்ப்பனவாகை : — ௧௬௬, ௩௦௫. பார்ப்பனவாகையாவது - கேட்கக்கடவனகேட்டுத் தலைமைபெற்ற அந்தணனை யாகத்தால் வெற்றியைப்பெருக்குதல்; 'கேள்வியாற் சிறப்பெய்தியானை - வேள்வியான விறன்மிகுத் தன்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, வாகைப்படலம், ௩.

பின்றேப்பெயர்ச்சி : — ௨௫௧. பின்றேப்பெயர்ச்சியாவது - காரியென்னும் புள் தடுக்கவும் அந்நிமித்தத்திற்கு அஞ்சாமற்போய்ப் போர்செய்த வீரனுக்கு அரசன் தண்ணளிசெய்தல்; 'போர்தாங்கிப் புள்விலங்கி யோனைத்-தார் வேந்தன் றலையளித்தன்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தைப்படலம், ௧௨.

புலவராற்றுப்படை : — ௪௮, ௪௧, ௪௪. புலவராற்றுப்படையாவது - மிகக அறிவுடையோனைத் தேவர்களிடத்து வழிப்படுத்துதல்; 'இருங்கண் வானத் திமையோ ருழைப் - பெரும் புலவனை யாற்றுப்படுத்தன்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண் படலம், ௪௨.

பூக்கோட்காஞ்சி : — ௨௯௩.

பூவைநிலை : — ௮, ௫௬, ௫௧, ௩௭௪. பூவைநிலையாவது - திருமாலின் திருவுருவோடு உவமித்துக்கூறும் காயாம் பூவைப்புகழ்தல்; 'கறவை காவல னிறமொடு பொரீஇப்-புறவலர் பூவைப்பூப்புகழ்ந்தன்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், ௪.

பெருங்காஞ்சி : — ௧௯௪, ௩௫௭, ௩௫௧, ௩௬௦, ௩௬௨, ௩௬௩, ௩௬௪, ௩௬௫, ௩௬௬. பெருங்காஞ்சியாவது-நிலையாமையைக் கருதிச்சொல்லுதல்; 'மலையோங்கிய மாநிலத்து - நிலையாமை தெரியுரைத்தன்று.'— புறப்பொருள் வெண்பாமாலை, காஞ்சிப்பொதுவியற்படலம், ௨.

பெருஞ்சோற்று நிலை : — ௨௯௨. பெருஞ்சோற்றுநிலையாவது - பகைவருடைய வேற்றுப்புலத்தை நமக்கு அழித்துத் தருவரென்று, மிக்கசோற்றை வீரர்கொள்ளும்படி அரசன்கொடுத்தல்; 'திருந்தார் தெம்முனை தெறுகுவரெனப் - பெருஞ்சோ றுடவர் பெருமுறை வகுத்தன்று' — புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சிப்படலம், ௨௩.

பேய்க்காஞ்சி : — ௨௮௧. பேய்க்காஞ்சியாவது - போர்க்களத்திலே பட்டார்க்குப் பேய் மிகவும் அச்சமுறுத்துதல்; 'பிணம்பிறங்கிய களத்து வீழ்ந்தார்க் - கணங்காற்ற வச்சுறீஇயன்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, காஞ்சிப்படலம், ௧௭.

பொதுமொழிக்காஞ்சி : ௭௫.

பொருண்மொழிக்காஞ்சி : — ௫, ௨௪, ௧௨௧, ௧௮௨, ௧௮௩, ௧௮௪, ௧௮௫, ௧௮௬, ௧௮௭, ௧௮௮, ௧௮௯, ௧௯௦, ௧௯௧, ௧௯௨, ௧௯௩, ௧௯௫, ௨௧௪. பொருண்மொழிகாஞ்சியாவது - முனிவர் தெளிந்த பொருளைச்சொல்லுதல்; 'எரிந்திலங்குஞ் சடைமுடி முனிவர் - புரிந்து கண்ட பொருண்மொழிந்தன்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, காஞ்சிப் பொதுவியற்படலம், ௩.

மகட்பாற்காஞ்சி:—௩௩௬, ௩௩௭, ௩௩௮. மகட்பாற்காஞ்சியாவது - நின்மகளைத் தருகவென்னும் அரசனோடு மாறுபட்டுநிற்றல்; 'ஏந்திழையாட் டருகென்னும் - வேந்தனொடு வேறுநின்றன்று.' புறப்பொருள்வெண்பாமாலை, காஞ்சிப்படலம், ௨௪.

மகண்மறுத்தல் : — ௧௦௧, ௧௧௦, ௩௩... மகண்மறுத்தலாவது - ஒருவீரன் ...

# துறைக்குறிப்பு.

[புறநானூற்றின் உரையைக்கொண்டே ஒருவாறுவிளங்கிய துறைகளும், அவற்றின் இலக்கணமும்.]

அரசவாகை :— அஃதாவது - அரசனது வெற்றியைக் கூறுதல் ; 'பொறுத்தற்கரியபிழையைப்பொறுத்த குணவென்றியான் அரசவாகையாயிற்று' என்றார் உரைகாரராதலின். ௨௫.

ஆனந்தப்பையுள் :— அஃதாவது - ஒருவன் இறந்ததைப்பற்றிச் சுற்றத்தார் இரங்கிக்கூறுதல் ; 'சுற்றத்தார் இரங்கிக்கூறுதலின் ஆனந்தப்பையுளாயிற்று'என்றார்உரைகாரராதலின். ௨௨௮.

இயன்மொழி :— அஃதாவது - இயல்பைக்கூறுதல் ; 'தம்கையின் மென்மையது இயல்புங்கூறுவார் அரசன் கையின் வலிய இயல்புங்கூறினமையான் இஃது இயன்மொழியாயிற்று' எனவும், 'இவைஎப்பொழுதுஞ்செய்தல் இயல்பெனக்கூறினமையின் இஃது இயன்மொழியாயிற்று' எனவும், 'அவனது இயல்பைப் புகழ்ந்தமையான் இயன்மொழியுமாயிற்று' எனவும், 'பண்ணனது இயல்புகூறி வாழ்த்தியவாறு' எனவும் முறையேகூறிப்போந்தார் உரைகாரராதலின். ௧௪, ௧௫, ௬௧, ௧௭௫.

உடனிலை :— அஃதாவது - உடனிருந்த இருவரைப்பாடுதல் ; 'இருவரரசர் ஒருங்கிருந்தாரைப் பாடினமையின் இஃது உடனிலையாயிற்று' என்றார் உரைகாரராதலின். ௫௮.

குறுங்கலி :— அஃதாவது - ஒருவனால் துறக்கப்பட்ட அவன்மனைவியை அவனொடு கூடுவிக்கும்பொருட்டு, நீ இவள்பால் அருள்செய்தல் வேண்டுமென வேண்டுதல்; 'பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியை அவனொடுகூட்டலுறுவார் அருள்பண்ணவேண்டுமென்று இரந்து கொண்டுகூறினமையின் குறுங்கலியாயிற்று' என்றார் உரைகாரராதலின். ௧௪௫.

கையறுநிலை :— அஃதாவது - கழிந்துபோன பொருளைக்குறித்து இரங்கிக்கூறுதல், 'இளமைகழிந்து இரங்கிக்கூறுதலான் இதுவும் கையறுநிலையாயிற்று' என்றார் உரைகாரராதலின். ௨௪௫.

கொற்றவள்ளை :— அஃதாவது - அரசனதுபுகழையும், அவன் பகைவரது நாடுஅழிதற்கு இரங்குதலையுங் கூறுதல் ; 'செற்றாயிற்றுக்கவினையென்றதனையும மன்னவன்புகழும் ஒவாதுகூட்டின் உடற்றியோர் நாடென்ன ஒன்னார் நாடழிபிரங்கலுமாதலான் இது கொற்றவள்ளையாயிற்று' எனவும், 'இது பிறரகன்றலை நாடு நல்லஇல்லவாகுபவென்றமையின் கொற்றவள்ளையும்' எனவும், 'காற்றோடெரிநிகழ்ந்தன்ன செலவிற்செருமிகுவளவென மன்னவன்புகழும், நிற்சினைஇயோர்நாடு பைதன்மாக்களொடு பெருங்கலக் குற்றன்றென ஒன்னார் நாடழிபிரங்கியது மாதலால் இது கொற்றவள்ளையாயிற்று' எனவும் முறையே கூறிப்போந்தார் உரைகாரராதலின். ௪, ௭, ௪௧.

செவியறிவுறூஉ :— அஃதாவது - அரசன்செய்யவேண்டும் உலகங்காவன் முறைமையை அவனிடஞ் சொல்லி அவன்செவியிற்புகுத்தி அறிவித்தல்; 'காவல் குழவிகொள்பவரினோம் பென்றமையாற் செவியறிவுறூஉவும்' எனவும், 'இஃது இவ்வாறுசெய்கவென அரசியல்கூறலிற் செவியறிவுறூஉ

**கந்து** - கம்பம், 'கந்துமுனிந் துயிர்க்கும் யானை' கஎஅ; 'களிறு - கந்து சேர்பு நிலைஇ வழங்க' உஉ; தறி, 'நெடுநல் யானைக்குக் கந்தாற் றுவே' ருஎ; பற்றுக்கோடு, 'மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த நீள்கழன் மறவர்' கூகூ; 'நட்புக் கந்தாக' உகஎ.

**கபிலர்** - சங்கப்புலவருளொருவர்; இவர் அந்தணர்; 'புலனழுக் கற்ற வந்தணாள, னிரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்' கஉசா; 'பொய்யா நாவிற் கபிலன் பாடிய, மையணி நெடுவரை' கஎச.

**கம்பலை** - ஆரவாரம், 'அழுவிளிக்கம்பலை' எ.

**கமழ** - பரக்க, 'வியலிடங் கமழ விவணிசை யுடையோர்க்கு' ரு௰.

**கயம்** - நீர்நிறைந்தபள்ளம், 'கயத்திட்ட வித்து' கஙஎ.

**கரக்கினும்** - மறைக்கினும், 'தன்னுளடக்கிக் கரக்கினுங் கரக்கும்' க.

**கரகம்** - குண்டிகை, 'நீரற வறியாக் கரகத்து' க.

**கரப்பு** - மறைத்தல், 'கரப்பி லுள்ளமொடு' ஙச.

**கராம்** - முதலை, 'ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்னை' க௰ச; முதலையுள் ஒருசாதி, 'கராஅங் கலித்த குண்டு கண்ணகழி' ஙஎ.

**கரிகால்வளவன்** - ஒருசோழன், 'களியியல் யானைக் கரிகால வளவ' சாசா.

**கரு** - கருப்பம், 'மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்' ஙச; முட்டை, 'புறவுக் கருவன்ன புன்புல வரகு' ஙச.

**கரும்பனூர்** - ஓரூர், ஙஅச.

**கருமை** - வலிமை, 'கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி' ங; 'கருங்கைக் கொல்லன்' உக.

**கருவி** - தொகுதி, 'கருவி வானம்'

**கருவூர்** - இது சேரர்களுடைய இராசதானிகளுளொன்று; இது வஞ்சியெனவும் வழங்கும், கக, கங, ஙஉ, ஙசா, எஅ, கசாஅ, உககூ.

**கலக்குற்றன்று** - கலக்கமுற்றது, 'பெருங்கலக் குற்றன்றால்' சக.

**கலப்பை** - மூட்டுக்கள்; யாழுமாம், 'காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை' உ௰சா.

**கலம்** - ஆபரணம், 'செய்வுறு நன்கலம்' சா; குப்பி, 'யவனர் - நன்கலந் தந்த தண்கமழ் தேறல்' ருசா.

**கலவம்** - மயிற்பீலி, 'கலவ - மஞ்ஞை யிற் காண்வர வியலி' கஙங.

**கலாம்** - போர், 'புலாற்களஞ் செய்த கலாஅத் தானையன்' சாங.

**கலாவ** - கலக்க, 'தண்சிதர் கலாவப் பெய்யினும்' க௰ரு.

**கலி** - ஓசை, 'கலிகெழு கடவுள்' ருஉ; செருக்கு, 'வெள்ளுளைக் கலிமான்' கரு, 'கலிமான் வளவ' ஙங; 'கதழ் பரிய கலிமாவும்' ருரு; தழைத்தல், 'கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை' சாசா.

**கலிச்சும்மை** - மிக்க ஆரவாரம், 'கலிச்சும்மை வியலாங்கண்' உஉ.

**கலித்த** - செருக்கிய, 'கராஅங் கலித்த' ஙஎ; தழைத்த, 'தூவற் கலித்த தேம்பாய் புன்னை' உச, மிக்க, 'மாணினங் கலித்த மலை' கஙஅ.

**கலுழ்ந்து** - கலங்கி, 'உண்கண் - கலுழ்ந்து வாரரிப்பனி' கசச.

**கவ்வை** - எள்ளிளங்காய், 'கவ்வை கறுப்ப' கஉ௰.

**கவசம்** - மெய்புகு கருவி, 'புலிநிறக் கவசம்' கங.

**கவர்பு** - கவர்ந்து, 'அந்தண் காவிரி வந்துகவர் பூட்ட' ஙரு; கவர்ந்து, 'விளைவயல கவர்பூட்டி' கசா.

**கவலை** - கவர்ந்தவழி, 'துன்னருங் கவலை' ங.

**கவான்** - மலைப்பக்கம், 'விறல்வரைக் கவான்' கருக.

**கவிகண்ணோக்கு** - கையாற்கவிக்கப்பட்டுப்பார்க்கும்பார்வை, 'கவிகண் ணோக்கின் ஆடவர்' ங.

**கவிகுளம்பு** - கவிந்தகுளம்பு, 'வெள்ளுளைக்கலிமான் கவிகுளம் புகள' கரு.

**கவிகை** - இடக்கவிந்தகை, 'கவிகை வண்மைக் - கடுமான் கோதை' ருச.

**கவினிய** - அழகுபெற்ற, 'ஆசினி கவினிய பலவின்' கருஅ.

**கவினை** - ஒளியையுடையாய், 'செஞ்ஞாயிற்றுக் கவினை' ச.

கவுள் - கன்னம், 'களிறுகவு ளடுத்த வெறிகல்' ௩௦.

கவைஇய-அகத்திட்ட, 'ஆரங் கவைஇய மார்பே' ௧௯.

கவைமுள் - வேலமுள், 'கவைமுள்ளிற் புழையடைப்பவும்' ௯௮.

கழங்கு - கழற்சிக்காய், 'மகளிர் - பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்' ௩௬.

கழல் - ஒருகொடி, 'கழற்கனிவகுத்த' ௯௭; வீரகண்டை, 'தாள் - களங்கொளக் கழல்பறைந்தன' ௪.

கழனி - வயல், 'கழனி யுழவர்' ௧௩.

கழாத்தலை - கழாத்தலையாரென்னும் சங்கப்புலவர்; 'நும்போலறிவி னுமருளொருவன், புகழ்ந்தசெய்யுட் கழாஅத் தலையை, யிகழ்ந்ததன் பயனே' ௨௦௨.

கழால் - கழுவுதல், 'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்' ௯௪; களைதல், 'களைகால் கழாலின்' ௧௨௦.

கழி - காம்பு, 'தோல் கழியொடு பிடிசெறிப்பவும்' ௯௮.

கழிப்பி - முடித்து, 'மூவேழ்துறையு முறையுளி கழிப்பி' ௧௫௨.

கழிய - இறப்ப, 'மாணிழை மகளிர் நாணினர் கழிய' ௭௮.

கழியும் - இறக்கும், 'ஆடுநர் கழியுமிவ் வுலகத்து' ௨௯.

கழுமிய - கலந்த, 'ஆத்தரக் கழுமிய துகளன்' ௨௫௮.

கழுவாய் - போக்கும்வழி, 'வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென' ௯௪.

கழூஉ - கழுவி, 'கழூஉவிளங் காரம்' ௧௬.

களம் - போர்க்களம், 'ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய' ௨; யாகசாலை, 'யூப நட்ட வியன்களம் பலகொல்' ௧௫.

களரி - களர்நிலம், 'கள்ளி போகிய களரியம் பறந்தலை' ௨௨௫.

களிறு - ஆண்பன்றி, 'களிறுமேல் கொள்ளவும்' ௪௧; யானை, 'கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்' ௯.

கறங்க - ஒலிப்ப, 'சிலைத்தார் முரசங் கறங்க' ௩௬.

கறி - மிளகுகொடி, 'கறிவள ரடுக்கத்து' ௧௬௮.

கறிக்கும் - தின்னும், 'மடப்பிணை...... வேளை வெண்பூக் கறிக்கும்' ௨௩.

கறுழ் - குதிரைமுகக்கருவி, 'மாவே,... கறுழ்பொருத செவ்வாயான்' ௪.

கறை - கறுட்பு, 'கறைமிட றணியலு மணிந்தன்று' ௧.

கறையடியானை - கறைபொருந்திய அடியினையுடைய யானை, ௩௮, ௧௩௫.

கன்மார் - கற்பார், 'இளம்பல கோசர் விளங்குபடை கன்மார்' ௧௬௯.

கனலி - சூரியன், 'அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்' ௩௫; 'வெங்கதிர்க் கனலி துறறுவும்' ௪௧.

கனை - மிகுதி, 'கனையெரி யுரறிய மருங்கும்' ௨௩.

## கா.

கா - சோலை, 'கடிமரந் துளங்கிய காவும்' ௨௩; தோட்சுமை, ௧௦௩.

காண்கு - காணபேன், 'காணகு வந்திசிற் பெரும' ௧௭; எந்தைசிற் காண்குவந் திசினே' ௧௨௫.

காண்பு - காட்சி, 'கார்ப்பெய றலைஇய காண்பின காலை' ௧௧௯.

காப்பினை - காவலையுடையை, 'விதுப் புற வறியா வேமக் காப்பினை' ௨௦.

காபபு - காவல், 'காப்புடைய வெழுமுருக்கி' ௧௪.

காமர் - அழகு, 'காமர் - வண்ண மார்பு' ௧.

கரய்தல் - விடாய்த்தல், 'காய்தலு முண்டக் கள்வெய் யோனே' ௨௫௮.

காய - காவிய = சுமந்த, 'சுவலழுந்தப் பலகாய' ௧௩௯.

காயம் - ஆகாயம், 'வறிதுநிலைஇய காயமும்' ௨௦, ௩௦.

கார் - கார்காலம், 'கண்ணி கார்நறுங் கொன்றை' ௧.

காரியாறு - ஓராறு, ௪௭.

காரெனொக்கல் - புல்லென்றசுற்றம் 'காரெ னொக்கற் கடும்பசி யிரவல' ௧௪௧.

காரை - ஒருசெடி, 'முட்காற் காரை முதுபழன்' ௨௫௮.

காலம் - முடிவு, 'ஞாலங் காக்குங் கால முன்பின்' ௫௬.

காலமுன்ப - காலன்போலும் வலியையுடையோய், 'கால முன்பநிற் கண்டனென்' ௨௩.

காவல் - காக்கப்படுந்தேயம்; ஆகுபெயர், 'காவல் - குழவி கொள்பவரி னோம்புமதி' ரு.

காவலர் - காக்கும் அரசர், 'வையங் காவலர்' அ.

காவிரி - ஒருநதி, 'அந்தண் காவிரி வந் தகவர் பூட்ட' கூரு; 'மிக்குவரு மின் னீர்க் காவிரி' சாகூ; 'நீயே தண்பு னற் காவிரிக் கிழவனை' ருஅ; 'புனி றுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச், சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர்' சுஅ; 'பொன்படு நெடுவரைப் புய லேறு சிலைப்பிற், பூவிரி புதுநீர்க் கா விரி புரக்குந், தண்புனற் படப்பை' கஉசா; 'கரைபொருது, இரங்குபுன னெரிதரு மிகுபெருங் காவிரி, மல்ல னன்னாட்டு' கஎச; 'கோடை யாயி னுங் கோடி .....காவிரி புரக்கு நன் னாடு' கூகூகூ; 'முழங்குநீர்ப் படப் பைக் காவிரிக் கிழவன்' கூககூ.

காவிரிப்பூம்பட்டினம் - சோழநாட்டில் கடற்கரைக்கண் இருந்ததோர் பழை யநகரம், ருஎ, ருஅ, கஎக, கூருகூ.

காழ் - கம்பம், 'வெளிறி னோன்காழ்ப் பணைநிலை முனைஇ' உகூ; காம்பு, 'கணைதுர னோன்காழ் திருத்தி' கூரு; நாராசம், 'கயத்துவாழ் யாமை காழ் கோத் தன்ன' எ௦; முத்துவடம், 'மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்' கரு௦; விதை, 'அணில்வரிக் கொடு ங்காய் வாள்போழ்ந் திட்ட - காழ்' உசா.

காழகம் - ஆடை, 'காழக நீப்பவும்' சக.

கான் - காடு, 'கானக நாடனை' ரு.

கானப்பேர் - காளையார்கோயில்; இது பல சிற்றரண்களையுடையதோர் பேரரண்; இதன் தலைவன் வேங்கைமார்பன்; இவனைவென்று இதனைக்கைக் கொண்டான் உக்கிரப் பெருவழுதி, 'அருங்குறும் புடுத்த கானப் பேரெயில், ......... வேங்கை மார்ப னிரங்க' உக; கூசுஎ.

கானல் - கடற்கரை, 'நிலவுமணல் வியன்கானல்' கஎ; 'கானற் கழியுப்பு முகந்து' சு௦.

## கி.

கிடப்பி - கிடத்தி, 'பசும்புற் பரப்பினர் கிடப்பி' கூகூ.

- கெட்டி, 'அறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை' எரு.

கிண்கிணி - சதங்கை, 'கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டு' என.

கிணை - உடுக்கை, 'நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை' எ௦; போர்ப்பறை, 'பாடின் றெண்கிணை கறங்க' எசு; தெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே' எஅ.

கிணைமகள் - விறலி, 'கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே' ககக.

மகன் - கிணையென்னும்பறையையுடையவன், 'இரும்பறைக் கிணைம கூஅஅ.

ன் - கிணைமகன், 'கொன்வரல் கூஎகூ.

வான் - உரித்தாந்தன்மையையுடையோன், 'விழுநீர் வேலி நாடுகிழ வோனே' கூ.

கிழித்த - கின்ற, 'குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொடு' கூச.

கிள்ளி - ஏறுதி திருக்கிள்ளி, 'கழல் புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி' கசுஎ. சோழன்.

கிள்ளிவளவன் - சோழன் குளமுற்றத் துத்துஞ்சிய கிள்ளிவளவன், 'உருகெழு பசும்பூட் கிள்ளி வளவன்' சுக; 'கிள்ளி வளவ னல்லிசை யுள்ளி' எ௦.

கிளை - இனம், 'கிளைபுகலத் தலைக்கூடியாங்கு' கஎ.

கிளைப்பின் - கிளறின், 'கேழ லுழுத விருஞ்சேறு கிளைப்பின்' கஎசு.

கிளையை - கிளைமையை யுடையோய், 'கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென' கசச.

## கீ.

கீழ்மடை - கடைமடை, 'அரிநர் கீழ் மடைக் கொண்ட வாளையும்' சஉ.

கீளவது - உடைவது, 'சிறுகுளங் கீள் வது மாதோ' ககஅ.

## கு.

குச்சு - குச்சுப்புல், 'குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்' உருஎ.

குட்டம் - ஆழம், 'இருமுந்நீர்க் குட்ட மும்' உ௦; 'நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து' உசகூ.

குட்டுவன் - சோழியவேனாதி திருக்குட்டுவன், 'வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்' ருசரு.

குடக்கு - மேற்கு, 'வெண்டலைப் புணரிக் குடகடல்' உ; 'குடாஅது தொன்றுமுதிர் பௌவத்துக் குடக்கும்' சா.

குடகமலை - மேற்றிசையின்கண்ணதோர் மலை, 'குடாஅது பொன்படு நெடுவரை' கருசா.

குடர் - நரம்பு, 'அரிக்குட ரரியின் யாமை மிளிர' உசக.

குடவாயில் - ஓரூர், எச, உசஉ.

குடவர் - குடநாட்டார், 'வரையா வீகைக் குடவர் கோவே' கஎ.

குடாது - மேற்கின்கண்ணது, 'குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்' சா.

குடிஞை - பேராந்தை, 'கடுந்துடி குடிஞையோ டிரட்டும்' கஎ0.

குடுமி - பாண்டியன் பல்யாகசாலைமுதுகுடுமிப்பெருவழுதி, 'குடுமிக் கோமாற் கண்டு நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே' சச.

குடுமித்து - முடிபையுடைத்து, 'கொண்ட குடுமித்தித் தண்பணை நாடே' ருஉ.

குடை - பனையோலையாற்செய்யப்படும் ஒருவகை உண்கலம், 'இரும்பனங் குடையின் மிசையும்' கஎஎ.

•குண்டு - ஆழம், 'குண்டகழி' கச; 'குண்டுசுனை' ககசா.

குணக்கு - கிழக்கு.

குணாது - கிழக்கின்கண்ணது, 'குணாது கரைபொரு தொடுகடற் குணக்கும்' சா.

குணில் - முரசடிக்கும் குறுந்தடி, 'குணில்பாய் முரசி னிரங்கு மருவி' கசரு.

குதிரை - ஒருமலை, 'ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற், கூவிளங் கண்ணிக் கொடும்பூணெழினியும்' கருஅ; 'ஊராக் குதிரைக் கிழவ' கசாஅ.

குப்பை - திரட்சி, 'குப்பை நெல்லின் முத்தூறு தந்த' உச.

குமணன் - ஒருகொடையாளி, 'குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண' கருக; 'நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்' கசா0; 'திருந்துவேற் குமணன்' கசாரு; 'நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண' கசாச.

குமரி - கன்னியாறு, 'தெனாஅ துருகெழு குமரி' சா; 'தென்குமரி' கஎ; 'குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி' சாஎ.

குய் - தாளிப்பு, 'கமழ்குய் யடிசில்' க0; 'சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்' கஉஎ.

குரம்பை - சிறியமனை, 'குறியிறைக் குரம்பை' கஉக.

குரல் - ஏழுநரம்பில் முதற்றானம், 'குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்' கக; கதிர், 'மானணி பெருங்குர லனையன்' கருஅ; தோகை, 'பரூஉக்குரற் சிறுதினை' கசாஅ.

குரவை - குரவைக்கூத்து, 'சினமாந்தர் வெறிக்குரவை - யோத நீரிற் பெயர்பு பொங்க' உஉ.

குரிசில் - தலைவன், 'பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்' கச.

குரீஇ - குருவி, 'குன்றத் திறுத்த குரீஇயினம்' ககூ; 'தூக்கணங் குரீஇத் தூங்குகூ டேய்ப்ப' உஉரு.

குருமபை - பனைநுங்கு, 'இரும்பனையின் குரும்பைநீரும்' உச.

குரூஉ - கனம், 'பசுமட் குரூஉத்திரள் போல' ருஉ.

குலவு - வளைவு, 'குலவுச்சினைப் பூக்கொய்து' கக.

குவவு - திரட்சி, 'ஓங்குமணற் குவவுத் தாழை' உச.

குவளை - செங்கழுநீர், 'நீர்தரு மகளிர் குற்ற குவளையும்' சஉ; 'குண்டுசுனைப் பூத்த குவளை' ககசா. நீலம், 'தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை' க0ரு.

குவை - குவிவு, 'குவையிருங் கூந்தல்' உரு.

குவைஇய - திரண்ட, 'கூர்வேற் குவைஇய மொய்ம்பின்' ககஅ.

குழவி - குழந்தை, 'தாயி றூவாக் குழவி போல' ச.

குழவிகொள்பவர் - குழந்தையை வளர்ப்போர், 'குழவி கொள்பவரி னோம்புமதி' ரு.

குழிசி - பானை, 'இருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்ப' சாரு.

குழீஇ - திரண்டு, 'கொண்மூ வேண்டு வயிற் குழீஇ' கசாக.

குழை - தளிர், 'பொலங்குழை யுழிஞை' ।

குழைப்ப - தளிர்ப்ப, 'முளிபுற் கானங் குழைப்ப' கசுo.
குளவி - மலைமல்லிகை, 'அடைமல்கு குளவி' கூo; 'கூதளங் கவினிய குளவி முன்றில்' கசுஅ.
குளிப்ப - மேல்விழுந்து உள்புக, 'கடற்படை குளிப்ப மண்டி' சு.
குற்ற - பறித்த, 'குற்ற குவளை' சஉ.
குற்றுதல் - குறுதல், 'குற்றுறு வுலக்கை' உஉ.
குறித்து - கருதி, 'நீரழுவ நிவப்புக் குறித்து' கச.
குறியெதிர்ப்பை - குறித்த எதிர்ப்பை, 'கொடுங்குறி யெதிர்ப்பை நலகி' கசுரு.
குறுகி - அணுகி, 'இடையின்று குறுகி' ருச.
குறுங்கோழியூர் - ஓரூர், கஎ, உo, உஉ.
குறுநணி - அணிமை, 'நம்முட் - குறுநணி காண்குவ தாக' உoக.
குறும்பறை - பேடை, 'உயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ' சுஎ.
குறும்பு - அரண், 'குறும்பல் குறும்பிற் றதும்பவைகி' கஎஎ; குறும்பர், 'குறும்படைந்த வரண்கடந்தவர்' கூஎ. சிற்றரண், 'குரூஉக்களிற்றுக் குறும்புடைத்தலின்' கூஎ.
குறுமகள் - மனைவி, 'மெல்லியற் குறுமக ளுள்ளிச் செல்வல்' ககசு.
குறுமாக்கள் - சிறுபிள்ளைகள், 'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்' கூச.
குறை - முடிக்கப்படும்பொருள், 'பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே' கஅஅ.
குன்றினும் - குறையினும், 'மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்' ருரு.
குன்று - சிறுமலை, 'குன்றுமலை காடுநாடு' கஎ; 'குன்றுறு வெறியு மரவம் போல' உகக; பக்கமலை, 'அம்மலை காக்கு மணிநெடுங் குன்றின்' கருo.
குன்றூர் - ஓரூர், ருருஅ.

கூ.

கூஉம் - கூப்பிடும், 'ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே' ச; கூவும், 'சேவல்...... ஏனல் காப்போ ருணர்த்திய கூஉம்' உஅ.
கூகை - கோட்டான், 'வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி' உருஅ.
கூடல் - மதுரை, 'தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே' ருஅ.
கூடலூர் - ஓரூர், உஉக.
கூடு - நெற்கூடு, 'கூடு வியனகர்' கசஅ.
கூதளம் - கூதாளி, 'கூதளங் கவினிய குளவி முன்றில்' கசுஅ.
கூம்பு - பாய்மரம், 'கூம்பொடு மீசைப் பாய் களையாது' ருo.
கூர் - மிகுதி, 'கூரி லாண்மை' எரு.
கூழ் - சோறு, 'கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்' எo; பொரு[illegible] கஉஉ.
கூழை - பின்படை, 'கூழைதார் கொண்டு' அஅ; மயிர், 'கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்' சுக.
கூளியர் - ஆறலைகள்வர், 'குரங்கன்ன புன் குறுங்கூளியர்' கருசு; மறவர், 'கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்' உரு.
கூற்றம் - நாட்டின் ஒருபாகம், உச; யமன், 'மருந்தில்கூற்றத்து' ரு.
கூற்று - யமன், 'உயிருண்ணுங் கூற்றுப் போன்றன' ச.

கெ.

கெடிறு - ஒருவகைமீன், 'குரூஉக் கெடிற்ற குண்டகழி' கஅ.
கெடுவின்று - கெடுதலில்லாமல், 'கெடுவின்று.........அறநின்று நிலையிற்று' ருக.

கேட்டிசின் - கேட்டேன், 'பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே' கருo.
கேட்பல் - கேட்பேன், 'கேட்ப லெந்தே' உஎ.
கேழ் - நிறம், 'சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ் - நூற்றித ழலரின்' உஎ,
கேளலம் - கேட்டறியோம், 'இன்றினுங்கோ கேளலம்' எசு.
கேளிர் - சுற்றத்தார், 'வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தமரும்' சஉ.
கை - கோடாவியின்கை, 'நெடுங்கை நவியம்' ருசு; செயல், 'மையன் மாலையாங் கையறு பினைய' சுஎ.
கைம்முற்றல - முடியா, 'கைம்முற் றல நின் புகழே' ருரு.
கைம்மை - கைம்மைநோன்பு, 'ஒண்ணுதன் மகளிர் கைம்மை கூர' உரு.

கையறவு - மிடிமை, 'பிறர்கை யறவு தானு ணுதலும்' கருஎ.
கைவழி - யாழ், எப்பொழுதும் கைய கத்திருத்தலால் இப்பெயர்பெற்றது; 'கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி' கசக.

## கொ.

கொட்கும் - சூழவரும், 'காலுண வாகச் சுடரொடு கொட்கும்' சா.
கொடி - ஒழுங்கு, 'ஆய் கரும்பின் கொடிக்கூரை' உஉ; 'மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி' ருஉ; துவசம், 'கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்' கூ?
கொடிஞ்சி - தேர்மொட்டு, 'நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்' எஎ.
கொடிது - தீத்தொழில், 'கொடிது கடிந்து கோலிருத்தி' கஎ.
கொடுத்தோய் - வழங்கினோய், 'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' உ.
கொடுமை - வளைவு, 'கொடுவிற் கூளியர்' உகூ;
ணீர்ச் சிறுகுளம்' ககஅ.
கொடுவரி - புலி, பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; ஆகுபெயருமாம், 'கொடுவரி வழங்குங் கோடியர் நெடுவரை' ககூரு.
கொண்கானம் - ஒருமலை, கருச, கருரு, கருசு.
கொண்டல் - கீழ்காற்று, 'கொண்டன் மாமழை' கூச.
கொண்டி - கொள்ளை, 'கொண்டியும் பெரிதென' எஅ; 'தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாக' ககூஅ; திறை, 'கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கென' ௲க.
கொண்பெருங் கானத்துக்
கொண்கானங்கிழான், கருசு.
கொண்பெருங்கானம் - கொண்கானமென்னுமலை, 'தண்பல விழிதரு மருவிக், கொண்பெருங் கானம் பாடலெனக் கெளிதே' கருச; 'விளங்குபுகழ்க் கொண்பெருங் கானத்துக் கிழவன்' கருரு; 'இரண்டுநன் குடைத்தே கொண்பெருங் கானம்' கருசு.

கொண்மார் - கொள்ளல்வேண்டி, 'ஒன் படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்' கரு.
கொண்மென - கொண்மினெனச்சொல்லி, 'கொண்மெனச் சாத்திடை நல்கி யோனே' கருஉ.
கொய்து - பறித்து, 'குலவுச்சினைப் பூக் கொய்து' கக.
கொல்லாது - கெடுக்காமல், 'பிறரெனக் குணங்கொல்லாது' ருரு.
கொல்லி - ஒருமலை, 'ஓங்கு கொல்லி யோ ரடுபொருந' உஉ; 'ஓங்கிருங் கொல்லிப் பொருநன்' கருஉ; 'பிறங்குமிசைக் கொலலி யாண்ட வல்வி லோரியும்' கருஅ.
கொலைவன் - கொல்லுதலைச்செய்பவன், 'கொலைவன் யார்கொலோ' கருஉ.
கொழுநன் - தலைவன்.
கொழுமீன் - கொழுவியமீன், 'கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும் - கொழுமீன்' கரு.
கொள்கை - விரதம், 'ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை' உசு.
கொள்ளார் - பகைவர், 'கொள்ளாரோட்டிய நள்ளியும்' கருஅ.
கொளீஇ - கொளுத்தி, 'பூநாற்றத்த புகைகொளீஇ' கச; ஓங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ' ருரு; பெய்து, 'புனற்குருதி யுலைக் கொளீஇ' உசு.
கொளை - பாட்டு, 'கொளைவல்பாண் மகனும்' கக.
கொற்றம் - வெற்றி, 'பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே' உக.
கொற்றன் - பிட்டங்கொற்றன், 'கைவள் ளீகைக் கடுமான் கொற்ற' கசுஅ; 'திருந்துவேற் கொற்றன்' கஎக.
கொன்றோர் - சிதைத்தோர், 'ஒருவன் செய்தி கொன்றோர்க்கு'.

## கோ.

கோ - அரசன், 'ஆற்றலெங்கோ' உஉ.
கோடாது - வளையாமல், 'நமரெனக் கோல்கோடாது' ருரு.
கோடியர் - கூத்தர், 'விழவிற் கோடியர் நீர்மை போல' உகூ.
கோடு - கொம்பு, 'நுதிமழுங்கிய வெண் கோட்டான்' ச. சிகரம், 'பொற் கோட் டிமயமும்' உ. பக்கம், 'கோ

மதிரன் கொண்மூ' ௯௫. புடை, 'கோடிய ரடப்பு' ௧௬௪. யாழின் ஒருறுப்பு, 'கருங்கோட்டுச் சீறியாழ்' ௧௨௭ ; ௧௪௫.

கோடை - கடிய நெடுவேட்டுவன்மலை, 'வெள்வீ வேலிக் கோடைப் பொரு ந' ௨௦௫.

கோதை - சேரமான் கோக்கோதைமார்பன், 'கோதை மார்பிற் கோதை யானும்' ௪௮ ; 'யாங்கன மொழிகோ வோங்குவாட் கோதையை' ௪௯. சேரன், 'மாவள் வீகைக் கோதையு ம்' ௧௭௨. மாலை, 'கோதை மார்பிற் கோதை யானும்' ௪௮.

கோயில் - அரண்மனை, ௯௬.

கோல் - கோற்றொழில், 'வார்கோல் ......குறுந்தொடி மகளிர்' ௯௬.

கோவல் - கோவலூர்.

கோவலூர் - இது பெண்ணையாற்றின் கரையின் கண்ணதோர் நகரம் ; இத ன் தலைவர் மலையமான் திருமுக்காரி முதலியோர் ,இஃது ஒரு காலத்து அதியமான் நெடுமானஞ்சியால் வெ ல்லப்பட்டது ; கோவலெனவும் வழ ங்கும், 'மூரண்மிகு கோவலூர் நூறி நின், அரணடு திகிரி யேந்திய தோ ளே' ௯௯.

கோழூர் - ஓரூர், ௯௧.

கோழி - உறையூர், 'கோழி - யுயர்நிலை மாடத்து' ௬௭ ; கோழி யோனே கோப்பெருஞ் சோழன்' ௨௧௨.

கோள் - குலை, 'செழுங்கோள் வாழை' ௧௬௮.

கோளி - பூவாது காய்க்கு மரம், 'முழு முத றொலைந்த கோளி யாலத்து' ௫௮.

கோனாடு - இது சோழநாட்டின் உள் நாடுகளுளொன்று, ௫௪.

## கௌ.

கௌரியர்-பாண்டியர், 'தவிரா வீகைக் கௌரியர் மருக' ௩.

## சா.

சாஅய் - மெலிந்து, 'நல்கா மையி னைவ ரச் சாஅய்' ௧௪௬.

சாகாடு - உருள், 'அச்சுடைச் சாகாட் டாரம்' ௨௫௬. சகடம்=வண்டி, 'ஆ ரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்' ௬௦ ; 'பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய' ௯௦ ; 'காவற் சாகா டுகைப் போன்' ௧௮௫; 'அச்சுடைச் சாகா ட் டாரம் பொருந்திய - சிறுவெண் பல்லி' ௨௫௬.

சாத்தன் - ஒலலையூர்கிழார்மகன் பெருஞ் சாத்தன், 'வல்வேற் சாத்தன் மாய்ந்த முல்லையும் பூத்தியோவவு ப்ர் நாட்டே' ௨௪௨; பாண் டியன் கீரஞ்சாத்தன், 'உண்மென விரக்கும் பெரும்பெயர்ச் சாத்தன்' ௧௭௮.

சாந்து - சந்தனம், 'பொலங்கீழ்றகாற் புலர்சாந்தின்' ௩.

சாபம் - வில், 'சாப நோன்ஞாண்' ௧௪; 'குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி' ௭௦.

சாயலர் - இளைப்பையுடையர், 'உழை யோர் தன்னினும் பெருஞ்சா யல ரே' ௧௩௨.

சாயா - இளையாத, 'மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயா' ௩.

சாயின்று - சாய்ந்தது, 'சாயின் றென்ப வாஅய் கோயில்' ௧௨௭.

சார்வு - புகலிடம், 'உறுநர் செல்சார் வாகி' ௨௦௫.

சாறு - விழா, 'சாறுகொண்ட களம் போல' ௨௨ ; 'சாறுதலைக் கொண் டென' ௮௨.

சான்ற - அமைந்த, 'பாடல் சான்ற வி றல்வேந்தனும்' ௧௧.

சான்றோர்-நற்குணங்களாலமைந்தோர், 'சான்றோர் செய்த நன்றுண் டா யின்' ௯௪.

## சி.

சிதடன் - குருடன், 'தஞ்சபுலி யிட றிய சிதடன் போல' ௭௩.

சிதடு - குருடு ; இஃது எண்வகையெச் சத்துள் ஒன்று, 'சிறப்பில் சிதடு முறு ப்பில் பிண்டமும்' ௨௮.

சிதர் - துளி, 'தண்சிதர் கலாவப் பெய் யினும்' ௧௦௫.

சிதலை - கறையான், 'நுண்பல் சிதலை யரிதுமுயன் றெடுத்த - செம்புற்று'

சிதார் - சீலை, 'வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்' ௬௯ ; கூருகிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன - பாறிய சிதாரேன்' ௧௫௦.

சிதைய - அற, 'புலிநிறக் கவசம் பூம் பொறி சிதைய' ௬௩ ; சிதற, 'தண் ணுன் பொருநை வெண்மணற் சி தைய' ௩௬.
சிமை - மலையுச்சி, 'ஆடுகழை நரலுஞ் சேட்சிமை' கஉ0.
சிலம்பு - மலை, 'குணில்பாய் முரசி னிர ங்கு மருவி-நளியிருஞ் சிலம்பு' கசரு.
சிலை - வில, 'சிலைத்தா ரகலம்' சுக.
சிலைக்கும் - கொட்டும், 'வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி' கஎ0.
சிலைத்து - ஒலித்து, 'சிலைத்தெழுந்து' எஅ.
சிவந்து - கோபித்து, 'கதவெறியாச் சிவ ந்தராஅய்' ச.
சிற்றரையம் - அரையமென்னும் நகரத் தின் ஒருபாகம், உ0உ.
சிறந்த - மிகுந்த, 'சிறந்த சீர்கெழுகொ டியும்' க; 'சிறந்த - நான்மறை முனி வர்' சு.
சிறந்தன்று - கனத்தது, 'சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே' எரு.
சிறப்பு - செல்வம், 'தகைப்பெருஞ் சிற ப்பிற் குடிமிக் கோமான்' சுச ; தலை மை, 'வீயாச் சிறப்பின் வேள்வி மு ற்றி' கரு ; 'உரைசால் சிறப்பிற் புக ழ்சான் மாற' ருஎ ; 'உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்' எஉ.
சிறுகுடி - பண்ணனூர், 'கைவள் ளீ கைப் பண்ணன் சிறுகுடி' எ0.
சிறபதம் - தண்ணீர், 'கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்' எச.
சிறுபேராளர் - சிறியபெரிய ஆண்மை யையுடையோர், 'நெடுமொழி மறந்த சிறுபே ராளர்' கஎஅ.
சிறை - அரண், 'நீர்மிகிற் சிறையு மில் லை' ருக ; காவல், 'வீங்குசிறை விய லருப்பம்' கஎ ; சிறகு, 'இருந்துசி றை வளைவாய்ப் பருந்து' ரு.
சினவின் - கொதித்தெழுமாயின், 'இரு ளு முண்டோ ஞாயிறு சினவின்' கூ0.
சினை - மரக்கிளை, 'குலவுச்சினைப் பூக் கொய்து' கக.
சினைஇ - கோபித்து, 'அலங்குளைப் புர வி யைவரொடு சினைஇ' உ ; 'மடங்க லிற் சினைஇ' எக.
சினைஇயோர் - சினப்பித்தோர், 'வளவ நிற் சினைஇயோர் நாடே' சக.

# சீ.

சீக்கும் - தாக்கும், 'மந்தி சீக்கு மணங் குடை முன்றில்' உசஎ.
சீர் - அளவு, 'விரிசீர்த் - தெரிகோல்' சு. தலைமை, 'விழுச்சீர் - ஓடாப் பூ ட்கை' கஉசு ; 'தண்குரவைச் சீர்தூ ங்குந்து' உச. தாளம், 'பறைச்சீர் தூங்க' சுஉ. நன்மை, 'சீருடைய விழைபெற் றிசினே' கக. பெருமை, 'சீர்கெழு கொடியு மவ்வே றென்ப'
சீர்த்தி - மிகுபுகழ், 'அருஞ்சீர்த்திப் பெ ருங்கணுறை' கரு.
சீறை - துலாம், 'சீறை புக்க வரையா வீகை யுரவோன்' சஅ.

# சு.

சுட்டின் - குறிப்பின், 'தொன்னிலக் கிழமை சுட்டின்' ருஉ.
சுடர் - ஒளி, 'தெறுசுடர் ஒண்கதிர் ஞாயிறு' சு. சூரியன், 'சுடர் சுட்ட சுரத்தேறி' கருசு.
சும்மை - ஆரவாரம், 'கலிச்சும்மை விய லாங்கண்' உஉ.
சுரம் - அரியவழி, 'நெடிய வென்னாது சுரம்பல கடந்து' சஎ.
சுருக்கி - கட்டி, 'நல்யா ழாகுளி பத லையொடு சுருக்கி' சுச.
சுருக்கினெம் - கட்டினேம், 'சுருக்கி னெங் கலப்பை' உ0சு.
சுவல் - தோள், 'சுவலழுந்தப் பலகாய' கருக ; 'சுவற்பூண் ஞாண்மிசைப் பொலிய' கசுசு. மேட்டுநிலம், 'வே ங்கைச் செஞ்சுவல்' கஉ0.
சுவைக்க - உண்ண, 'சுவைக்கினி தா கிய குய்யுடை யடிசில்' கஉஎ.
சுற்றம் - கிளைகள், 'நகைப்புற னாகின் சுற்றம்' உக.
சுறவு - ஒருமீன், 'சுறவினத் தன்ன வா ளோர்' கரு.

# சூ.

சூட்டிய - நடாத்திய, 'நீரக விருக்கை யாழி சூட்டிய' கக. பரப்பிய, 'நில வரை சூட்டிய நீணெடுந் தானை' உஉஅ.
- சூட்டிறைச்சி, 'குறமுயற் கொ ழுஞ்சூடு' ருச. நெற்சூடு, 'பீலி - கழனி யுழவர் சூட்டொடு தொகுக் கும்' கரு.

சூர் - சூரபன்மா, 'சூர்கவை முருகன்' உகூ.

சூர்ப்பு - வளைந்தகடகம், 'சுடாவிடு பசு ம்பூட் சூர்ப்பமை முன்கைக' கருகூ.

சூல் - கருப்பம், இளம்பிடி யொருசூற் பத்தீ னும்மோ' கஙு0.

சூழ்ச்சி - உசாவுதல், 'போற்றார்ப் பொ றுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்' உ.

## செ.

செக்கர் - செந்நிறம், 'செல்சுடர் ஞாயி ற்றுச் செக்கரிற் றோன்ற' கசு.

செங்கோலை - செங்கோலையுடையை, 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' உ0.

செத்து - அறிந்து, 'முழவின் - பாடின் றெண்கண் கனிசெத்து' கஉஅ.

செதுக்கண் - ஒளிமழுங்கினகண், 'புது க்கண் மாக்கள் செதுக்க ணார' உசுக.

செந்தில் - திருச்செந்தூர், 'வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில், நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை' ருரு.

செம்பியன் - சோழன்,
தானைச் செம்பியன் மருக' கூஎ.

செம்பியர் - சோழர்,
சிறப்பிற் செம்பியர் மருகன்' உஉஅ.

செம்மல் - தலைமை, 'தம்மைப் பிழைத் தோர்ப் பொறுக்குஞ் செம்மல்' சகூ; தும்மோ ரன்ன செம்மலு முடைத் தே' சாஎ.

செம்மலை - தலைமையையுடையாய், 'எம க்கும் பிறர்க்குஞ் செம்மலை யாகலின்' கசுசு.

செம்மற்று-தலைமையையுடையது, 'செ ம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை' கூகூ.

செம்மீன் - அங்காரகன்; திருவாதிரையு மாம்; 'செம்மீ னிமைக்கு மாக விசு ம்பின்' சு0.

செம்மை - நேர்மை, 'செந்தொடை பிழையா வன்க ணாடவர்' கூ.

செய் - செய்கை, 'பெருஞ்செய் யாட வர்' ககூக.

செய்தி - செய்கை, 'குடிப்பொரு ளன் றுநுஞ் செய்தி' சருரு. செய்கன்றி, 'செய்தி கொன்றோர்க் குய்தி யில் லென' கூச. செய்வை, 'இனிய செ ய்திநின் னார்வலர் முகத்தே' கஉ.

செய்திமோ - செய்வாயாக, 'அறஞ்செய் திமோ வருள்வெய் யோய்' கசுரு.

செய்மே - செய்வாயாக, 'வேட்டது செய்ம்மே' சஅ.

செயற்கை - தொழில்; 'இயற்கை யல் லன செயற்கையிற் றோன்றினும்' கூரு.

செயிர் - குற்றம், 'செயிர்தீர் கற்பிற் சேயிழை' கூ.

செயிர்த்தன்று - வெகுண்டது, 'செற் றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்' உஉசு.

செரீஇ - செருகி, 'மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ' உஉ.

செரு - சண்டை, 'செருமிகு சேஎய்' கச.

செருக்கிய - களித்த, 'நிணந்தின்று செ ருக்கிய நெருப்புத்தலை நெடுவேல்' உ00.

செல்ல - பரக்க, 'உரைசெல முரசு வெளவி' உசு.

செல்லாமோ - போவேமல்லேமோ, 'செல்லா மோதில் சில்வளை விறலி' சுச.

செல்வக்கடுங்கோவாழியாதன் - சேர மான்சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், 'செருமிகு நோன்றாட் செல்வக் கடுங்கோ, வாழி யாத னென்னுந் தெவ்வர்' கூஅஎ.

செல்வை - செல்வமுடையாய், 'செல் வை யாயிற் செல்வை யாகுவை' எ0.

செலல் - செல்லுதல், 'வீங்குசெலன் மண்டிலம்' அ

செலவு - வீதி, 'செஞ்ஞா யிற்றுச் செல வும்' கூ0.

செலியர் - தணிக, 'செலிய ரத்தைநின் வெகுளி' சு.

செலீயர் - போவதாக, 'படாஅச் செலீ யர்நின் பகைவர் நாளே' உச.

செவ்வழி - இரங்கற்பண், 'சீறியாழ் செவ்வழி பண்ணி' கசச, கசஎ. மா லைப்பண், 'கைவழி மருங்கிற் செவ் வழி பண்ணி' கசக.

செவ்வானம் - செக்கர்வானம், 'செவ் வா னத்து வனப்புப் போன்றன' ச.

செவ்வியோர் - நடுவுநிலைமையையுடை யோர், 'செவ்வியோர்க் களித்தலும்' உக.

செவிசெஞ்சேவல் - கழுகின் சேவல், 'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த செவிசெஞ் சேவலும்' உகூஅ.

செழியன் - பாண்டியன்; 'வென்வேற் செழிய' கக; 'சிதைதலுய்ந் தன்றே

செற்றன்று - கறுவுகொண்டது, 'செற் றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்' உஉ௬.

செற்றும - சென்றுசெறியும், 'ஆழற் புற் றத் துடும்பிற் செற்றும்' க௫உ.

செறல் - வெகுட்சி, 'செறனோக்கின் ..... களிறு' க௫.

செறிவினை - அடக்கத்தையுடையாய், 'அறிவறி வாகாச் செறிவினை யாகி' ௩௦.

செறு - வயல், 'மலங்குமிளிர் செறுவில்' ௬௧; 'நூறுசெறு வாயினும்' க௮௪.

செறுக்கும் - அடைக்கும், 'மீனிற் செ றுக்கும்' எ.

செறுத்த - அடக்கிய, 'செறுத்த செய் யுள்' ௫௩.

செறுவர் - பகைவர், 'செறுவர் நோக் கியகண்' க௦௦.

சென்மே - செல்வாயாக, 'தேர்வே ளா யைக் காணிய சென்மே' க௩௩.

சென்னி - சோழன், உ௦௩. தலை, 'இ றைஞ்சுக பெருமநின் சென்னி சிற ந்த, நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே' ௬.

## சே.

சேக்கும் - உறங்கும், 'கயலார் நாரை போரிற் சேக்கும்' உ௪; 'பொய்கை நாரை போரிற் சேக்கும்' உ௦க.

சேக்கை - கட்டில், 'நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை' ௫௦.

சேண் - நெடுந்தூரம், 'சேண்விளங் கும் புகழ்' க௦; 'சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு' க௭௪. நெடுநாள், 'திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி' உ.

சேட்சென்னி - சோழன் நலங்கிள்ளி யின்பெயர், 'சேட்சென்னி நலங்கி ள்ளி' உ௭; 'சேட்சென்னி நலங்கிள் ளி கேட்குவன் கொல்லென' உஉ௫.

சேப்ப - தங்க, 'கான மஞ்ஞை கண் ணொடு சேப்ப' க௨௭.

சேய்-முருகக்கடவுள், 'செருமிகுசேஎய்' க௪.

சேர்ப்பன் - நெய்தனிலமுடையவன், 'படிமிழ் பணிக்கடற் சேர்ப்ப னெ ன்கோ' ௪௯.

சேர்ப்பு-கடற்கரை, 'பிறங்குநீர்ச் சேர் ப்பினும் புள்ளொருங் கெழுமே' ௪க.

சேர்பு - பொருந்தி, 'மழகளிறு சுந்து சேர்பு நிலைஇவழங்க' உஉ.

சேர்மின் - அடையும், 'தும்மரண்சேர் மின்' ௯.

சேறு - செறிவு, 'தலையோர் நுங்கின் றீஞ்சேறு மிசைய' உ௨௫.

சேறும் - செல்லுதும், 'சேறும் வாழி யோ பெரும்பெயர்ப் பறம்பே' க௧௩.

## சொ.

சொலிய - களையவேண்டி, 'புறவி னல் லல் சொலிய' ௩௯; 'பண்டைச் சா காட் டாழ்ச்சி சொலிய' ௯௦

சொன்றி - சோறு, 'புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்' க௯எ.

## சோ.

சோரும் - வடியும், 'அயறுசோரு மிருஞ் சென்னிய' உஉ.

ஞமலி-நாய், 'தொடர்ப்படு ஞமலியின்' எ௪.

ஞமன் - சமன், யமன், 'தெரிகோல் ஞமன்ன்போல' ௬.

## ஞா.

ஞாண் - நாண், 'சாப நோன்ஞாண்' க௪; 'ஓங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ' ௫௫.

ஞாயில் - மதிற்சூட்டு, 'மீன்பூத் தன்ன வுருவ ஞாயில்' உக.

ஞாயிறு - சூரியன், 'நின்கடற் பிறந்த ஞாயிறு' உ; 'செஞ்ஞா யிற்றுக் கவி னை' ௪; 'ஒண்கதிர், ஞாயிறு' ௬,

ஞான்ற - வீழ்ந்த, 'பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று' ௮உ.

நீமிறு - தேனீ, 'வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாம்' க௩.

ஞெமல-பரக்க, 'வரிமணன் ஞெமல' க௰.

ஞெலிதல் - கடைதல், 'தான்ஞெலி தீயின் விரைவினன் சுட்டு' க௫௦.

ஞெலிதீ - கடைந்துகொள்ளப்பட்டதீ, 'கானவர் பொத்திய ஞெலிதீ விளக் கத்து' உ௪௭.

ஞெள்ளல் - தெரு, 'கலிந்தேர் கழிந்த ஞெள்ளல்' க௫.

தடியும் - வெட்டும், 'கடிமரந் தடியு மோசை' ௩௬.

தகடு - புறவிதழ், 'மாத்தகட் டொள்வீ தாய துறுகல்' ௨௦௨.

தகடூர் - ஓரூர், ௫௦.

தகரம் - ஒருமரம், 'தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்' ௧௩௨.

தகவு - தகுதி, 'காணுத்தக வுடைத்தே' ௩௬.

தகுதி - தக்கசெய்கை, 'தகுதி கேளினி மிகுதி யாள' ௧௮.

தகை - அழகு, 'தகைமாண் வழுதி' ௫௯. கூறுபாடு, 'வான்றுடைக்குந் தகைய போல' ௩௮. தகுதி, 'தகைமாண் குடுமி' ௬.

தகைத்த - கட்டப்பட்ட, 'நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை' ௭௦.

தகைத்தல் - சுற்றுதல், 'தகைத்தார்' ௬௯.

தங்கால் - திருத்தங்காலென்னுமோரூர், ௩௨௬.

தசும்பு - குடம், 'துணைபுண ராயமொடு தசும்புடன் றொலைச்சி' ௨௨௪. மிடா, 'தயிர்கொடு வந்த தசும்பு' ௩௩.

தஞ்சம் - எளியது, 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' ௭௩. எளியேன், 'யானோ தஞ்சம்' ௩௪.

தட்கும் - தளையாகிற்கும், 'ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே' ௧௯௩.

தட்டை - கிளிகடிகருவி, 'புனவர் தட்டை புடைப்பின்' ௪௯.

தட்டோர் - தடைப்படச்செய்தோர், 'தட்டோ ரம்ம விவட்டட் டோரே' [தன்- பகுதி]. ௧௮.

தட்ப - தடுப்ப, 'புள்ளிடை தட்ப' ௧௨௪.

தட - பெருமை, 'தாடோய் தடக்கை' ௧௪.

தடவரல் - வளைவு, 'தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்' ௧௩௫.

தடவு - ஓமகுண்டம், 'வடபான் முனிவன் தடவினுட் டோன்றி' ௨௦௧. சுளை, 'தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை' ௧௦௫. பெருமை, 'தடவு நிலைப்பலவு' ௧௪௦; 'தடவுச்சினைப் பல்பழம்' ௧௧௯.

தடி - ஊன்றடி, 'என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே' ௨௩௫. தசை, 'புலவுநாற்றத்த பைந் தடி' ௧௪.

தண்டம் - தண்டனை, 'தண்டமுந் தணிதி' ௧௦.

தண்டா - தணியாத, 'தண்டா வீகை' ௬.

தண்மை - குளிர்ச்சி, 'தண்பொருனைப் புனற்பாயும்' ௧௧; மென்மை, 'தண் குரவை' ௨௪.

தண்ணுமை - முழவு, 'விசியுறு தண்ணுமை' ௮௯.

தணிதி - தணிவை, 'தண்டமுந் தணிதி' ௧௦.

ததும்ப - நிரம்ப, 'ததும்ப வைகி' ௧௭௭. மிகவொலிப்ப, 'ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப' ௧௧௪.

ததைய - சிதற, 'அருஞ்சமந் ததைய ௯௩; 'அருஞ்சமந் ததையத் ௧௨௬.

தந்து - கொ டு, 'ஆரெயில் பலதந்து' ௬.

தப்பிய - பிழைத்த, 'பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' ௩௪.

தபுதி - அழிவு, 'புறவின் றபுதியஞ்சி' ௪௩.

தம்மென - தாருமென, 'இன்னுந் தம்மென வெம்மனோ ரிரப்பின்' ௨௦௩.

தமர் - தனக்குச்சிறந்தோர், 'தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்' ௧௫௭.

தமித்து - தனித்து, 'நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே' ௧௮௪.

தரீஇய - தரவேண்டி, 'ஆர்கலியாணர்த் தரீஇயகால் வீழ்த்து' ௨௦௫.

தரூஉந்து - தரும், 'எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து' ௨௪.

தரூஉம் - தரும், 'யொருபடை தரூஉங் கொற்றமும்' ௩௫.

தலை - இடம், 'பெருங்கை யானையிரும் பிடர்த்தலை யிருந்து' ௩.

தலைஇய - தலைப்பட்ட, 'வளித்தலைஇய தீயும்' ௨; பெய்துமாறிய, 'கார்பெ ய றலைஇய' ௧௧௯.

தலைக்கை - முதற்கை, 'தலைக்கை தரூஉந்து' ௨௪.

தலைக்கொண்ட - தன்னிடத்தேகொண்ட, 'நிலந்தலைக் கொண்ட......ஈரைம் பதின்மரும்' ௨.

தலைக்கொண்டென - தொடங்கிற்றாக, 'சாறுதலைக் கொண்டென' ௮௨.

தலைப்பாடு - நேர்படுதல், 'தலைப்பா டன்றவ னீகை' ௭௦.
தலைப்போகன்மையின் - முடிவுபோகாமையின், 'தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி' ௨௨௯.
தலைமயங்கிய - கைகலந்த, 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ௧௯.
தலையாலங்கானம் - தலையாலங் காடென்னுமூர், 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ௧௯; இதன் வரலாற்றை, 'ஆலங்கானம்' என்பதிற் காண்க.
தவல் - இறந்துபடுதல், 'அவல மறுசுழி மறுகலிற் றவலே நன்று' ௨௯௮.
தவழ - பரக்க, 'எரிதவழ' ௯௮.
தவிரா - ஒழியாத, 'தவிரா வீகை, ௯.
தழீஇ - தழுவி, 'நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ' ௬௯. அணைத்துக்கொண்டு, 'ஒருபுடைத் தழீஇ' ௭௯௫.
தழீஇய - அணைத்துக்கொண்ட, 'சிறுமறி தழீஇய தெருநடை மடப்பிணை' ௨௯.
தழும்பனூர் - ஓரூர், 'பாண்சேரி வாய்மொழித் தழும்பனூ ரன்ன' ௯௪௮.
தழை - மகளிரணியும் ஒருவகையுடை; இது மலராலும் தளிராலும் செய்யப்படுவது, ௧௧௬, ௨௪௮.
தள்ளாதோர் - தளையாதவர், 'தள்ளாதோரிவட் டள்ளா தோரே' ௧௮.
தளம்பு - சேறுகுத்தி, 'மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட பழன வாளை' ௬௧.

## தா.

தா - வலி, 'தாவி னன்பொன்' ௧௫௨.
தாக்கி - வெட்டி, 'அருஞ்சமந்ததையத் தாக்கி' ௧௨௬.
தாங்க - பிடிக்க, 'முன்புதுரந்து சமந் தாங்கவும்' ௧௪.
தாங்கி - தடுத்து, 'வருதார் தாங்கி' ௬௨. பொறுத்து.
தாங்கிய - தடுத்த, 'எழூஉத் தாங்கிய கதவு' ௯௭.
தாயம் - உரிமை, 'மலர்தாயத்து' ௧௭; முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' ௭௩.
தார் - மாலை, 'வண்ண மார்பிற் றருங் கொன்றை' ௧; 'சிலைத்தார் மார்ப' ௧௦; 'சிலைத்தா ரகலம்' ௬௧. முன்படை, 'ஒண்படைக் கடுந்தார் முன்பு தலைக் கொண்மார்' ௧௫; 'வருதார் தாங்கி' ௬௨.
தாரம் - பலபண்டம், 'கடற்பஃ றாரத்த நாடுகிழ வோயே' ௩௦.
தாலம் - உண்கலம், 'பெருந்தோ டாலம் பூசன் மேவர' ௧௨௦.
தாலி - ஐம்படைத்தாலி; இஃது இளமைப்பருவத்திற் கழுத்திலணியும் ஒருவகை அணி, 'தாலி களைந்தன்று மிலனே' ௭௭
தாழை - தெங்கு, 'குலையிறைஞ்சிய கோட்டாழை' ௧௭.
தாள் - முயற்சி, 'தாளிற் றந்து' ௧௮; மதனுடை நோன்றாள் ௭௫; 'தாளிற் கொள்ளலிர்' ௧௦௧.
தானை - சேனை, 'நிலவரை சூட்டிய நீணெடுந் தானை' ௨௨௮.

திகழ்தல் - விளங்குதல், 'மீன்றிகழ் விசும்பு' ௨௫
திங்கள் - சந்திரன், 'பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்' ௧௩. மாதம், 'திங்கள் வலித்த காலன் னோனே' ௮௭.
திணிந்த - செறிந்த, 'மண்டிணிந்த நிலனும்' ௨.
திணை - குடி, 'ஆடுகுடி மூத்த விழுத்திணைச் சிறந்த - வாளின் வாழ்நர்' ௨௪; 'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து' ௨௭; விழுத்திணைப் பிறந்த - விசைமேந் தோன்றல்' ௧௫௧.
தித்தன் - ஒரு சோழன், 'போரருந் தித்தன் காண்கதில்' ௮௦; 'மாவண் டித்தன் வெண்ணெல் வேலியுறந்தை யன்ன' ௩௫௨; 'சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்' ௩௯௫.
திமிரி - திமிர்ந்து, 'எச்சி லீர்ங்கை விற்புறந் திமிரி' ௨௫௮.
திமில் - மீன்படகு, 'திண்டிமில் வன்பரதவர்' ௨௪; 'முந்நீர் நாப்பட் டிமிற் சுடர் போல' ௬௦.
திரங்கி - உலர்ந்து, 'ஒளிறுவாண் மன்ன ரொண்சுடர் நெடுநகர் - வெளிறு கண் போகப் பன்னாட் டிரங்கி' ௧௭௭.
திரங்கிய - உலர்ந்த, 'பசித்தினத் திரங்கிய கசிவுடை யாக்கை' ௧௬௦.
திரியினும் - வேறுபடினும், 'நால்வேத நெறிதிரியினும்' ௨.

திரியீர் - வேறுபடீர், 'உடனிலை திரியீ ராயின்' ௫௮.

திருகி - முறுகி, 'விசும்புதீப் பிறப்பத் திருகி' ௩௭.

திருகிய - முறுகிய, 'சினந்திருகிய' ௨௫.

திருத்தி - செவ்விதாக்கி, 'கொடிது கடிந்து கோறிருத்தி' ௧௭.

திருவில் - இந்திரவில், 'திருவி லல்லது கொலைவி லறியார்' ௨௦.

திரைக்கும் - சுருட்டும், 'நிலந்திரைக் குங் கடற்றானை' ௩௯.

தில்லை - ஒருமரம், 'தில்லை யன்ன புல்லென் சடையோன்' ௨௫௨.

திளைப்ப - விளையாடாநிற்க, 'இளையர் திளைப்ப' ௨௫௩.

திறத்தல் - திறத்தல் செய்வாயாக, 'அறவை யாயி னினதெனத் திறத்தல்'

திறம் - கூறுபாடு, 'நிற்றிறஞ் சிறக்க' ௬. பக்கம், 'பெண்ணுரு வொருதிற னாகின்று' ௧.

திறல் - வலி, 'துன்னருந் திறல்' ௩; 'துன்னருங் கடுந்திறல்' ௩௯.

திறவோர் - கூறுபாடறிவோர், 'திறவோர் - காட்சியிற் றெளிந்தனம்' ௧௯௨.

தின்மென - திண்மிதென, ... ராக்கலொடு திண்மெனத் தருதலின்' ௧௫௦.

## தீ.

தீஞ்சாறு - இனியசாறு, 'பூங்கரும்பின் றீஞ்சாறும்' ௨௪.

தீஞ்சுளை - இனியசுளை, 'தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே' ௧௦௯.

தீட்டி - கோதி, 'கூந்த றீட்டி' ௬௨.

தீது - குற்றம், 'தீதுமருங் கறுமார்' ௩௩.

தீநீர் - இனியஇளநீர், 'குவவுத்தாழைத் தீநீரோடு' ௨௪.

தீமை - கொடுமை, 'நீமெய் கண்ட தீமை காணின்' ௧௦.

தீர்தல் - அறுதல், 'செயிர்தீர் கற்பு' ௩.

தீர்ந்தன்று - தீர்ந்தது, 'புரைதீர்ந் தன்று' ௪௨.

## து.

துகிர் - பவழம், 'பொன்னுந் துகிரு முத்தும்' ௨௧௮.

துஞ்சாய் - மடியாய், 'துஞ்சாய் மாறே' ௨௨.

துஞ்சுதல் - தங்குதல், 'புலிதுஞ்சு வியன்புலம்' ௫௪.

துஞ்சும் - தங்கும், 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' ௨௦. தூங்கும, 'மூத்தி ... றுஞ்சும்' ௨.

துடைக்கும் - தடவும், 'வான்றுடைக் குந் தகையபோல' ௩௮.

துணி - துண்டம், 'வெளிற்றுப் பனந் ...

துணியல் - தடி, 'பழன வாளைப் பருஉ ... டுணியல்' ௬௧.

'துன்னல் போகிய துணிவி ... ன்ன' ௨௩; 'துணிவி லோரே' ௨௧௪.

துப்பு - வலி, 'துப்புறுவர்' ௧௧; 'கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த' ௫௪.

துமிந்து - துணிந்து, 'தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து' ௧௯.

துமிய - துணிய, 'அணங்குடை யரவி னருந்தலை துமிய' ௨௧௧.

துய் - பஞ்சு, 'துய்த்தலை மந்தியை' ௧௫௮.

துயின்மடிதல் - உறங்குதல், 'துயின்மடிந் தன்ன' ௧௨௬.

துரந்து - செலுத்தி, 'முன்பு துரந்து' ௧௪.

துரப்ப - செலுத்த, 'ஊக்கந் துரப்ப' ௮.

துவ்வாள் - உண்ணாள், 'துவ்வா ளாகிய வென்வெய் யோளும்' ௧௫௯.

துவராபதி - இது பழையவேளிர்களின் நகரம்; இருங்கோவேளுடையது; துவரையெனவும் வழங்கும். 'உவரா வீகைத் துவரை யாண்டு, நாற்பத் தொன்பது வழிமுறை வந்த, வேளிருள் வேளே' ௨௦௧; இது துவாரஸமுத்திரமென்று இப்பொழுது வழங்கப்படுகின்றது. 'அகத்தியனார் ... துவராபதிப்போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல்வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையுங்கொண்டுபோந்து காடுகெடுத்து நாடாக்கி' எனத் தொல்காப்பியப்பாயிரவுரையிலும், 'மலயமாதவன் நிலங்கடந்த நெடுமுடியண்ணலுழை நரபதியருடன்கொணர்ந்த பதினெண்வகைக் குடிப்பிறந்த வேளிர்க்கும்' என அகத்திணையியல் ௩௨-ம் சூத்திரவுரையிலும் நச்சினார்க்கினியரெழுதியிருத்தல்காண்க.

துவரை - துவராபதி, உ௦க.

துவை - உணவின்விசேடம், 'ஊன்று வை - கறிசோ றுண்டு' கச; 'அட்டான் றானுக் கொழுந்துவை யூன்சோறு' ககரு.

துவைத்து - ஒலித்து, 'துவைத்தம்பிற் றுனைதோன்றுவ' ச.

துழந்த - துழாவிய, 'துடுப்பிற் றுழந்த' உசு.

துழந்து - துழாவி, 'இட்டுந் தொட்டுங் கௌவியுந் துழந்தும்' க௮அ.

துழவும் - சூழ்வரும், 'மாதிரந் துழவுங் கவலை நெஞ்சத்து' கஎச.

துளங்கல்செல்லாது - தளராது, 'தொல்லோர் மாய்ந்தெனத் *துளங்கல்செல் லாது' ருஅ.

துளங்கிய - நிலைகலங்கிய, 'கடிமரந் துளங்கிய காவும்' உரு.

துளங்கின - தளர்ந்தன, 'குடைதுளங்கினவே' சுஉ.

துளங்குதல் - அசைதல், 'துளங்கியலாற் பணையெருத்தின' கரு.

துறகல் - பொற்றைக்கல், 'மாத்தகட் டொள்வீ தாய துறகல்' உ௦உ.

துறையூர் - ஓரூர், 'தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை, நுண்பல மணலினும்' கருசு.

துனனம் - தையல், 'இழைவலந்த பஃறுன்னத்து' கருசு.

துன்னல் - அணுகுதல், 'துன்னல் போகிய' உரு.

## தூ.

தூஉய் - தூவி, 'உயர்பலி தூஉய்' கசரு.

தூங்க - ஆட, 'பறைச்சீர் தூங்க' சுஉ.

தூங்குதல் - செறிதல், 'தூங்கிரு ளிறும்பில்' கஉசு.

தூங்குந்து - ஆடும், 'தண்குரவைச் சீர் தூங்குந்து' உச.

தூம்பு - துளை, 'தூம்புடைத் தடக்கை' கரு.

தூவல் - துவலை, 'தூவற் கலித்த தேம் பாய் புன்னை' உச.

தூவாத - உண்ணாத, 'தூவாக் குழவி போல' ச.

## தெ.

தெரிகோல் - பொருள்களை ஆராயும் துலாக்கோல், 'தெரிகோன் ஞமன்ன் போல' சு.

தெரியல் - மாலை, 'பாசிலைத் தெரியல்' உரு; 'பொலனறுந் தெரியல்' உக; 'ஆர்புனைதெரியல்' அஉ.

தெவ்வர் - பகைவர், 'செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர்' சு.

தெவ்விர் - பகைவிர், 'களம்புகலோம் புமின்றெவ்விர்' அஎ.

தெவிட்டும் - அசையிடும், 'வன்கலை தெவிட்டும்' கசுக.

தெற்றி - திண்ணை, 'இலங்குவளை மகளிர் தெற்றி யாடும்' ருரு; வேதிகை, 'குறுந்தொடி மகளிர் - பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்' ருசு.

தெறல் - அழித்தல், 'வலியுந் தெறலு மளியு முடையோய்' உ; வெம்மை, 'செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது' உ௦.

தெறிக்கும் - துள்ளும், 'தாவுபு தெறிக்கு மான்மேல்' உருக.

தெறித்தல் - துள்ளல், 'தெறிநடை மடப்பிணை' உரு.

தெறிப்ப - முற்ற, 'தெறிப்ப விளைந்த தீங்கந் தாரம்' உருஅ.

தெறுகதிர் - சுடுகின்றகதிர், 'தெறுகதிர்க் கனலி' சரு.

தெறுதல் - சுடுதல், 'தெறுசுடரொண் கதிர் ஞாயிறு' கரு. தண்டஞ்செய்தல், 'கொடியோர்த் தெறுதலும்' உக.

தெறுவர - வெகுட்சிதோன்ற, 'தெறுவர விருபாற் படுக்குநின் வாய்வாள்' ரு௦.

தெறுழ் - காட்டிலுள்ள தோர்கொடி; புளிமாவென்றுமுரைப்பர், 'தெறுழ் வீ பூப்ப' ககரு.

தென்புலவாழ்நர் - தென்றிசைக்கண்வாழ்வோர்=பிதிரர், 'தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் - பொன்போற் புதல்வர்' கு.

தென்னம்பொருப்பு - பொதியின்மலை, 'தென்னம் பொருப்ப னன்னாடு' ருரு.

தெனுஅது - தெற்கின்கண்ணது, 'தெனுஅ துருகெழு குமரி' சு.

## தே.

தேம் - தேயம், 'தெவ்வர் தேஎத்து' சு. தேன், 'தேம்பாய் புன்னை' உச.

தேர்க்கால் - குயவன் கலம்வனையுந் திகிரி; தேர்க்கால்போன்றிருத்தலின் இப்பெயர்பெற்றது, 'வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த - பசுமண்' ருஉ.

தேற்றாய் - தெளியாய், 'தேற்றாய் பெரும பொய்யே' ௫௧.

தேறலை - தெளியாய், 'பிறர்பழி கூறுவோர் மொழிதேறலையே' ௪௦.

## தை.

தைஇ - செய்த, 'பாணர் சென்னி பொலியத் தைஇ' ௪௬.

தைஇய - செய்துபுனைந்த, 'கழறைஇய வல்லாளனை' ௫௦ புனைந்துசெய்த, 'வல்லோன் றைஇய' ௩௩.

தைவருதல் - தடவிவருதல், 'விசும்பு தைவரு வளியும்' ௨.

## தொ.

தொகுக்கும் - திரட்டும், 'தொகுக்குங் கொழுமீன்' ௯௩.

தொட்டு - செறித்து, 'கழறொட்டு' ௭௭. தோண்டி, 'மைந்தர் புண்டொட்டு' ௬௨.

தொடர் - சங்கிலி, 'தொடர்ப்படு ஞமலியின்' ௭௪.

தொடி - பூண், 'தொடித்தலை விழுத்தண்டு' ௨௪௩ வளை, 'ஒண்டொடி மகளிர்' ௨௪; 'தொடிகழித் திடுதல்' ௮௩. வீரவளை, 'தொடித்தோள்' ௨௬.

தொடுக்குவர் - வளைத்துக்கொள்வர், 'தமதெனத் தொடுக்குவ ராயின்' ௧௩௫.

தொடுதல் - தோண்டுதல், 'தொடுகடல்' ௬.

தொடுமின் - பிழிமின், 'நறவுந் தொடுமின்' ௨௬௨

தொடை - சந்து, 'தொடைப் பொலிந்த வலிகெழு தோளாள்' ௭௮; தொடுத்தல், 'செந்தொடை பிழையா வன்கணாடவர்' ௩; யாழ்நரம்பு, 'தேனீந் தொடைச் சீறியாழ்' ௭௦.

தொண்டி - இது கடற்கரையிலுள்ளதொரு நகரம், சேரருடையது, 'தண்டொண்டியோ ரடுபொருநகன'; 'கண்ணாறும்மே கானலந் தொண்டி' ௪௮.

தொலைஇயோன் - தொலைவித்தோன், 'தொலைஇயோ னிவனென' ௧௨௫.

தொலைச்சி - தொலைத்து, 'வெங்கட் டொலைச்சியு மமையாா' ௨௯; 'தசும்புடன் றொலைச்சி' ௨௨௪.

தொலைச்சிய - தொலைத்த, 'மான்கணந் தொலைச்சிய' ௧௫௦.

தொழில் - செயல், 'பிறிதுதொழி லறியா வாகலின்' ௧௪.

தொழுதி - கூட்டம், 'இரும்பிடித் தொழுதி' ௪௪.

தொழுவர் - உழவர், 'நெல்லரி தொழுவர்' ௨௦௯.

தொன்று - பழைமை, 'தொன்றிசை' ௨௧௭.

## தோ.

தோட்டி - அங்குசம், 'பொன்னியற் புனைதோட்டியால்' ௧௪. ஒருமலை, இது கண்டீரக்கோப்பெருநள்ளியுடையது, 'இரும்புபுனைந் தியறாப் பெரும் பெயாத் தோட்டி' ௧௫௦.

தோடு - இதழ், 'பொலந்தோட்டுப் பைந்தும்பை' ௨௨. இலை, 'தோடொலிபுநந்தி' ௧௨௦. தொகுதி, 'தோடுகொண் முரசு' ௨௩௮

தோண்டாது - பறியாமல், 'மிசைப்பரந் தோண்டாது' ௩௦

தோய்தல் - பொருந்துதல், 'தாடோய் தடக்கை' ௧௪.

தோல் - கேடகம், 'தோல் - துவைத் தம்பிற் றுளைதோன்றுவ' ௪. பரிசை, 'மழையுருவின தோல்பரப்பி' ௧௬; 'தோலகழியொடு பிடிசெறிப்பவும்' ௯௭. யானை, 'தோல்பெயரிய வெறுழ்முன்பின்' ௭.

தோற்றம் - காட்சி, 'அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல' ௩௧.

தோன்றல் - தலைவன், 'புகழ்சா றோன்றல்'

## ந.

நக்க - சுடுக, 'ஈரியு நக்க' ௫௭.

நகர் - கோயில், 'முக்கட் செல்வர் நகர்' ௬, 'ஒளிறுவாண மன்னரொண்சுடர் நெடுநகா.' நகரம், 'நெடுநகர் வினைபுனை நல்லில' ௨௩.

நகாஅல் - நகுகின்றிலேன், 'நகாஅலென வந்த மாறே' ௨௫௩.

நகுதக்கனா் - சிரிக்கத்தக்கார், 'நகுதக்கனரே நாடுமீக் கூறுநா' ௭௨.

நகை - மகிழ்ச்சி, 'வாயார் பெருநகை' ௨௧௨.

நசை - ஆசை, 'நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய' ௧௫.

நசைவர் - விரும்பிவந்தோர், 'நசைவர்க்கு மென்மை யல்லது' ௧௭௦.

நசைவேட்கை - நச்சியவிருப்பம், 'இன்னசை வேட்கையி னிரவலர் வருவர்' ௩.

# அரும்பத அகராதி.

நடுக்கு - நடுக்கம், 'நடுக்கின்றி நிலீய ரோ' ௨.

நடுங்க - தலையசைத்துக்கொண்டாட, 'சீறியாழ் நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி' ௧௪௫.

நண்ணார் - பகைவர், 'நண்ணார் நாணநாடொறுந் தலைச்சென்று' ௨௩.

நணி - அணிமை, 'திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்' ௧௫௪.

நம்பி - விரும்பி, 'வாயாரநின னிசைநம்பி' ௧௩௬.

நயந்து - மகிழ்ந்து, 'நயந்தளித்தல்' ௫௯. விரும்பி, 'நலனயந் தென்றும் வருஉம்' ௧௪௪.

நயம் - இன்பம், 'நயம்புரிந் துறையுநர்' ௧௪௫.

நயவ - நியாயத்தை யுடையான, 'நல்ல போலவு நயவ போலவும்' ௫௮.

நயன - ஈரம், 'நயனில் கூற்றம்' ௨௨௭.

நரந்தம் - நரந்தப்பூ, 'நரந்த நாறுந் தன் கையால்' ௨௩௫.

நரலுதல் - மூங்கிலிழைந்தொலித்தல், 'ஆடுகழை நரலும்' ௧௨௦.

நல் - வறுமை; நல்குரவென்பது நல்லெனக் குறைந்து நின்றது; 'கல்குயின் றன்னவெனலகூர் வளிமறை' ௧௩௬.

நல்க - அளிக்க, 'பரிசிலர்க் கருங்கல நல்கவும்' ௧௪.

நல்கி - கொடுத்து, 'பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி' ௬.

நல்கினும் - உவப்பினும், 'நல்கினு நல்கா ராயினும்' ௮௦.

நல்லவா - பெண்டிர், 'நல்லவர்க் காரணங் காகிய மார்பு' ௧௪

நல்லியக்கோடன் - ஓய்மா நல்லியக்கோடன், 'பெருமா விலங்கைத் தலைவன் சீறியா - ழிலவேலார் சொன்மலை நல்லியக் கோடனை' ௧௭௬.

நவ்வி - மான்குட்டி, 'சிறுதலை நவ்வி' ௨.

நவியம் - கோடாலி, 'வடிநவி னவியம் பாய்தலின்' ௨௩; 'நெடுங்கை நவியம் பாய்தலின்' ௩௬.

நவியம்பாய்தல் - வெட்டுதல், ௨௩; ௩௬.

நவிலுதல் - பயிலுதல், 'மறைநவி லந்தணர்' ௧.

நள்ளி - கண்டீரக்கோப் பெருநள்ளி; இவன் ஒருவள்ளல், 'பிறங்குமலை நள்ளி' ௧௪௮; 'நளிமலை நாட னள்ளியவ னனவே' ௧௫௦; 'ஆர்வமுற் - றுள்ளி வருந ருலைவுநனி தீரத் - தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்-கொள்ளா ரோட்டிய நள்ளியும்' ௧௫௮.

நள்ளென்மாலை - நள்ளென்னும் ஓசையையுடையமாலை, 'நள்ளென் மாலை மருதம் பண்ணி' ௧௪௯.

நளி - குளிர்ச்சி, 'மரம்பிறங்கிய நளிச் சிலம்பு' ௧௩௬. செறிவு, 'நளியிரு முந்நீர்' ௩௫. பெருமை, 'நளிகடல' ௨௬.

நளிய-செறிவையுடைய, 'நன்மர னளிய நறுந்தண் சாரல்' ௧௫௦.

நற்கு - நன்கு, 'அதுநற் கறிந்தனை யாயின்' ௩௫; 'அதுநற்கறிந்தனையாயின்' ௧௨௧.

நறுமபுல - ஒருவகைப்புல், 'நரந்தை நறுமபுன மேய்ந்த கவரி' ௧௩௨.

நறுமை - நன்மை, 'பொலனறுந் தெரியல்' ௨௯.

நறை - நறைக்கொடி, 'நறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி' ௧௬௮.

நன்று - பெரிது, 'நன்று மெல்லிய பெரும' ௧௪; 'நன்று நொய்தா லம்ம' ௭௫. நல்வினை, 'சான்றோர் செய்த நன்றுண் டாயின்' ௩௪.

நன்னன் - ஒருசிற்றரசன், 'பொலந்தேர் நன்னன் மருகன்' ௧௫௧.

நனந்தலை - அகன்றவிடம், 'நனந்தலை நல்லெயில்' ௧௫; 'நனந்தலைப் பேரூர்' ௫௭, 'கழைபயி னனந்தலைக் கறிவளரடுக்கம்' ௧௬௮.

## நா.

நாகன் - நாலைகிழான்நாகன், 'திருந்துவே ணாகன்' ௧௭௯.

நாஞ்சில - கலப்பை, 'நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள' ௧௯; நாஞ்சின்மலை, 'செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந' ௧௩௭; 'உயர்சிமய வுழாஅ நாஞ்சிற் பொருந' ௧௩௯; 'தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்' ௧௪௦; 'நீஞ்சுளைப் பலவி னாஞ்சிற் பொருந' ௩௮௦.

நாட்டம் - ஆராய்ச்சி, 'அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து' ௩௫; 'நாற்ற நாட்டத் தறுகாற் பறவை' ௭௦.

நாட்டை - நாட்டையுடையாய், 'ஆடுகளங் கடுக்கு மகநாட் டையே' ௨௮.

நாடல் - ஆராய்தல், 'நாடல் சான்ற மைந்தினோய்' ௧௫.

நாடன்-குறிஞ்சிநிலமுடையோன், 'நாட னென்கோ வூர னென்கோ' ௪௯.

நாடனை - நாட்டையுடையாய், 'கானக நாடனை நீயோ' ௫; 'பெருங்க னாட னை' ௧௩௭.

நாடி - ஆராய்ந்து, 'ஒப்ப நாடி' ௧௰.

நாப்பண் - நடு, 'பன்மீ னாப்பட் டிங் கள் போலவும்' ௧௩; 'முந்நீர் நாப்பட் டிமிழ்சுடர் போல' ௬௰.

நாம - அச்சம், 'நாம நல்லமர் செய்ய' ௧௬.

நாய் - சூதாடுகருவி, 'நாயிடக் குழிந்த - வல்லி னல்லகம்' ௫௨.

நார் - பன்னாடை, 'நார்பிழிக் கொண்ட வெங்கள்' ௧௭௰; 'நாரரி' ௨௩௨.

நாலைகிழவன் - நாலைகிழவனாகன், 'தோலா நல்லிசை நாலை கிழவன் - பருந்து பசி தீர்க்கு நற்போர்த் - திருந்துவே ணாகன்' ௧௭௯.

நாவாய் - மரக்கலம், 'முந்நீர் வழங்கு நாவாய்' ௧௩.

நாள் - காலை, 'நாண்மகி ழிருக்கை' ௨௯.

நாளவை - நாளோலக்கம், 'செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்' ௫௪.

நாற்றம் - மணம், 'நாற்ற நாட்டத் தறு காற் பறவை' ௭௰.

நிமிர்தல் - மிகைத்தல், 'நிமிர்பரிய மா தாங்கவும்' ௧௪.

நிரயங்கொள்பவர் - நரகத்தைத் தமக்கு இடமாகக்கொள்பவர், 'நிரயங் கொ ள்பவரொ டொன்றாது' ௫.

நிரயம் - நரகம், ௫.

நிணக்கும் - கட்டும், 'கட்டி னிணக்கு மிழிசினன்' ௮௨.

நிலவு - நிலைத்தல், 'நிலவுக்கடல் வளை ப்பு' ௩.

நிலியர் - நிற்பாயாக, 'நடுக்கின்றி நிலி யரோ வத்தை' ௨.

நிலீயர் - நிலைபெறுவாயாக, 'நிலீய ரத் தைநீ நிலமிசை யானே' ௧௬௬

நிலை - நிற்றல், 'பணைநிலை முனைஇ' ௨௩.

நிலைஇய - நிலைபெற்ற, 'வறிது நிலைஇய காயமும்' ௨௰; 'செந்தில் - நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை' ௫௫; 'வறிது நிலைஇய காயமும்' ௩௰.

நிலைஇயர் - நிற்பதாக, 'நின்று நிலைஇயர் நின னாணமீனே' ௨௪.

நிலையழிந்து - நிலைகலங்கி, 'கவியம்பாய் தவினிலையழிந்து' ௩௬.

நிவந்து - ஓங்கி, 'மாக்கட னிவந்தெழுத ரும்' ௪; 'உருகெழு மதியி னிவந்து சேண் விளங்க' ௩௧.

நிவப்பு - ஓங்குதல், 'நீர்நிலை நிவப்பு' ௬; 'நீரழுவ நிவப்பு' ௧௪.

மண்ணக நிழற்ற' ௩.

நிழற்றிய - நிழலைச்செய்த, 'வெண்குடை நிழற்றிய' ௧௮௯.

நிழற்றும் - நிழலைச்செய்யும், 'கொடிவி சும்பு நிழற்றும்' ௯; 'தீமிகின் - மன் னுயிர் நிழற்று நிழலு மில்லை' ௫௪.

நிற்பின்-நின்றால, 'முந்தை நிற்பின்' ௧௰.

நிறீஇ - நிறுத்தி, 'தம்புகழ் நிறீஇ' ௧௮.

நினவ - நின்னுடையனசிலகாரியம், 'நி னவ கூறுவல்' ௩௫.

## நீ.

நீர்-தன்மை, 'செந்நீர்ப் பசும்பொன்' ௯.
- தன்மையையுடையது,
நீர்த்தோ நினக்கெனெ' ௪௩.

## நு.

நுணங்கு - நுண்மை, 'நுணங்கு செந்நா வணங்க வேத்தி' ௨.௧௧.

நுணுகி-மெலிந்து, 'தோணுணுகி' ௯௬

நுதல் - சென்னி, 'குடுமி களைந்த நுதல' ௭௭. யானைமத்தகம்; 'புகரணிநுதல்' ௩; 'பூநுதல் யானை' ௧௨.

நுதி-நுனி, 'நுதிமழுங்கிய வெண்கோடு' ௪; 'நுதிமுக மழுங்க' ௩௧.

நும்மோரன்ன-நும்மைப்போலும், 'நும் மோ ரன்ன வேந்தர்' ௪௫; 'நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே' ௪௭.

நுவல - சொல்ல, 'ஈகை நுவல' ௨௪.

நுவலும் - சொல்லும், 'அறத்தாறு நுவ லும்' ௯

நுழைகல்லா - நுழையாத, 'கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை' ௨௧.

நுனை - நுனி, 'கூர்நுனை வேல்' ௪௨.

## நூ.

நூறி-அறைந்துகொண்டு, 'மூலைபொலி யாக முருப்ப நூறி' ௨௫; வெட்டி, 'அருஞ்சமந் ததைய நூறி' ௯௩.

## நெ.

நெடியோன் - வடிம்பலம்பநின்றபாண் டியன், 'முந்நீர் விழவி னெடியோன்' ௯.

நெடுமாவளவன் - சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன், ‘கொடிநுடங்கு யானை நெடுமாவளவன்’ உஉஅ.

நெடுமானஞ்சி - அதியமான்நெடுமானஞ்சி, ‘நெடுமானஞ்சிநீ யருளன் மாறே’ கூஉ; ‘கடுமான் றோன்றல நெடுமானஞ்சி’ உ0கூ.

நெடுமொழி - வஞ்சினம், ‘நெடுமொழி மன்னர்’ ருச. வீரமேம்பட்டவார்த்தை, ‘நெடுமொழி மறந்த சிறுபேராளர்’ கஎஅ.

நெடுவேளாதன் - ஒரு சிற்றரசன், ‘நெடுவே ளாதன் போந்தை யன்ன’ ஙஙஅ.

நெய்தல - சாக்காட்டுப்பறை, ‘ஓரி னெய்தல் கறங்க’ கஙச.

நெய்தலங்கானல் - இஃதூர் இளஞ்சேட்சென்னியூர், ‘நெய்தலங் கானனெடியோய்’ க0; இது நெய்தலங்கானலெனவும் வழங்கும்.

நெய்ம்மிதி - நெய்யால்மிதித்துத் திரட்டப்பட்ட கவளம், ‘நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ’ சச.

நெருநை - நேற்று, ‘நெருநைப் பகலிடங்கண்ணி’ உசகூ.

நெளிமருங்கு - குழிந்த இடம், ‘நில னெளி மருங்கின்’ கஅ.

நெளிய - வருந்த, ‘பொய்யாச் செந்நா நெளிய வேத்தி’ கருஅ.

நெறி - ஒழுக்கம், ‘நாஅல்வேத நெறி திரியினும்’ உ; முடக்கம், ‘நெறி கொள் வரிக்குடர்’ கரு0.

## நே.

நே - ஈரம், ‘நேஎ நெஞ்சின்’ ரு.

நேமி - சக்கரம், ‘நேமி யுய்த்த’ ரு.

## நை.

நைத்தல் - அழித்தல், ‘காடு நைத்தலின்’ கூஎ.

நைவர - இரங்க, ‘நல்கா மையி னைவரச் சாஅய்’ கசகூ.

## நொ.

நொதுமலாளர் - குறளைகூறுவார், ‘நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது’ ருகு.

## நோ.

நோக்கின்று - நோக்கியது, ‘மறுமை நோக்கின்றோ வன்றே’ கசக.

நோகு - நோவேன், ‘நோகோ யானே’ ககரு, உருச.

நோன் - வலி, ‘சாப நோன்ஞாண்’ கசு; ‘மதனுடை நோன்றாள்’ எரு.

நோன்றல் - பொறுத்தல், ‘தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்’ கருஎ.

## ப.

பஃறுளி - வடிம்பலம்பநின்ற பாண்டியனாலுண்டாக்கப்பட்டதோராறு, ‘முந்நீர் விழவி னெடியோன், நன்னீர்ப் பஃறுளி’ கூ.

பகடு - ஏர், ‘பகடு புறந்தருநர் பார மோம்பி’ ஙரு. கடா, ‘பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ’ கூ0. பரப்பு, ‘பகட்டெழின் மார்பின்’ கஙு. ‘ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பின்’ கருஉ. வலி, ‘கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்’ அஅ; ‘அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பின்’ கூ.

பகல் - சூரியன், ‘பகலிருளினும்’ உ. நடுவுநிலைமை, ‘படுவ துண்டு பகலாற்றி’ கஎ. பகற்பொழுது, ‘பகல்விளங் குதியால்’ அ. பகுத்தல், ‘நெருநைப் பகலிடங் கண்ணி’ உசக.

பகழி - அம்பு, ‘விழுத்தொடைப் பகழி’ கருஉ.

பகன்றை - பகன்றைப்பூ, ‘பனித்துறைப் பகன்றை’ உஙரு.

பச்சூன் - செவ்வித்தசை, ‘பச்சூன் றின்று’ உருஅ.

பச்சை - தோல், ‘பச்சை நல்யாழ்’ கருச.

பசலை - பொன்னிறம், ‘பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ’ கருரு.

பசும்பொன் - ஓட்டற்றபொன், ‘பாணன் சூடிய பசும்பொற் றாமரை’ கசக.

பஞ்சவர் - பாண்டியர், ‘செருமாண் பஞ்சவ ரேறே’ ருஅ.

பஞ்சி - பஞ்சு, ‘பஞ்சி முன்றிற் சிற்றில்’ ககசு.

பஞிலம் - தொகுதி, ‘பன்னூ றடுக்கிய வேறுபடு பஞிலம்’ சுஉ.

பட்டமாறு - பட்டபடியால், ‘பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே’ கங.

பட்டன்று - பட்டது, ‘மைந்துபட் டன்றே’ கங; ‘ஆங்குப் பட்டன் றவன் கைவண் மையே’ கஙச.

பட்டென - பட்டதாக, ‘அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டென’ உங.

படு - மொய்ப்ப, 'வண்டுபட மலர்ந்த' உச.

படப்பை - பக்கம், 'பாசவற் படப்பை' ரு : 'பெரும்புனற் படப்பை' கூஅ ; 'தண்புனற் படப்பை' கருரு. மனைப பக்கம், 'வனைக்கை விறலியர் படப் பைக் கொய்த வடகு' கசo.

படர் - நினைவாலுண்டாகிய நோய், 'அ ரும்படர் களைமே' கசரு.

படர்தி - போகின்றாய், 'அன்றோற் படர்தி யாயின்' சஅ.

படர்ந்து - நினைத்து, 'வள்ளியோர்ப் படர்ந்து' சஎ ; 'நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே' ககரு.

படாஅ - பட்டு, 'படாஅச் செலீயர்நின் பகைவர் மீனே' உச.

படியினை - படிவித்தனை, 'காப்புடைய கயம்படியினை' கரு.

படுக்கும் - உண்டாக்கும், 'சோறுபடுக் குந் தீயொடு' உo.

படுத்த - வீழ்த்த, 'எறிந்துகளம் படுத்த வேந்துவாள்' கக.

படுத்து - செய்து, 'இடர்ப்படுத் திரீஇய' உச.

படுதல் - விளித்தல், 'படுமணி யிரட்டும்' எஉ.

படுபு - தோன்றுதல், 'படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்' ருச.

படுமலை - ஒருவகைப்பாலைப்பண், 'படு மலை நின்ற பயங்கெழு சீறியாழ்' கருரு.

படை - ஆயுதம், 'எயிறு படையாக' ரு ; 'ஒண்படைக் கடுந்தார' கரு. குதி ரைக்கலம், 'பொலம்படைக் கலிமா' ககரு ; 'ஒளிறுபடைப் புரவிய தே ரும்' கருரு. கொளுத்து, 'திண்படை கலங்கிச் சிதைதலுய்ந் தன்றோ நின் வேல்' உரு.

படைத்திசினோர் - படைத்தவர், 'உட ம்பு முயிரும் படைத்திசி னோரே' கஅ.

படைப்பு - செல்வம், 'வாழிய பெரும நின் வரம்பில் படைப்பே' உஉ.

படைமடம் - வீரரல்லாதார்மேலும் மு துகிட்டார்மேலும் புண்பட்டார்மே லும் மூத்தார் இளையார்மேலும் போர் செய்தற்குச்செல்லுதல், 'படைமடம் படாஅன்பிறர் படைமயக் குறினே' கசஉ.

பண்டை - முன், 'பண்டையிற் பெரி தே' கo.

பண்ண - ஏற்ப அமைக்க, 'புனைதேர் பண்ணவும்' கஉ.

பண்ணன் - சிறுகுடிகிழான்பண்ணன், 'கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடி' எo ; 'யான்வாழு நாளும் பண்ணன் வாழிய' களரு. வல்லார்கிழான்பண ணன், 'வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்' கஅக.

பணி - ஏவல், 'வேற்றரசு பணிதொட ங்குநின்' கஎ.

பணியியர் - தாழ்க, 'பணியிய ரத்தை நின் குடையே முனிவர் - முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே' சு.

பனை - குதிரைப்பந்தி, 'பனைமுனிந்து - காலியற் புரவி யாலு மாங்கண' கஎஅ. பெருமை, 'பணைபெருத்தின்' கரு ; 'பாவடிப் பணைத்தாள்' எஉ. மருத நிலம், 'பெருந்தண்பணை பாழாக' கரு யானைக்கூடம், 'பணைநிலை மு னைஇக் - களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்' உரு.

பதச்சை - செவ்வியையுடையாய், 'இன் சொலெண் பதத்தை யாகுமதி' சo

பதம் - உணவு, 'பெருஞ்சோற்று மிகு பதம் வரையாது கொடுத்தோய்' உ ; 'கொள்பத மொழிய' உரு. கால், 'எறிபதத்தா னிடங்காட்ட' ச. கா லம், 'எறிபதத்தான்' ச. செவ்வி, சo; 'கொழுங்கொடி விளர்க்காய் கோட் பத மாக' கஉo ; 'பதனன்று புக்கு' கஉச. தாா், 'பெண்டிருந் தம்பதங் கொடுக்கும்' கருக

பதலை - ஒருகணமாக்கிணையென்னும் பறை, 'நலயா ழாகுளி பதலையொடு சுருக்கி' சுச ; 'ஒருதலைப் பதலை தூ ங்க' கoரு, 'பதலை யொருகண் பை யென வியக்குமின்' கருஉ.

பதுக்கை - கற்குவியல், 'அம்புவிட வீழ் ந்தோர் வம்பப் பதுக்கை' ரு. திட் டை, 'பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி' உசுச.

பயந்த - பூத்த, 'சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ் - நூற்றிதழ் பூலர்' உஎ.

பயம்-பயன், 'பயங்கெழு மாநிலம்' ருஅ.

பயம்பு - குழி, 'மாப்பயம்பின் பொறை போற்றாது' கஎ.

